# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்!—சுவாமி விவேகானந்தர்

பிங்கள ௵ ஆவணி ௴

தொகுதி 57 இதழ் 8



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : : சென்னை-600 004

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—57 | பிங்கள ஹு ஆவணி மீ | இதழ் 8 |
|---|---|---|

## பொருளடக்கம்

பக்கம்







# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன்இல்லை

— திருமூலர்

| | | |
|---|---|---|
| தொகுதி 57 | பிங்கள ஸூ ஆவணி மீ | இதழ் 8 |


## பிரார்த்தனை



प्रपन्न-पारिजाताय तोत्र-वेत्रैक-पाणये।
ज्ञानमुद्राय कृष्णाय गीतामृतदुहे नमः ॥

—गीता ध्यानश्लोकः

ப்ரபன்ன — பாரிஜாதாய தோத்ர — வேத்ரைக — பாணயே |
ஜ்ஞானமுத்ராய கிருஷ்ணாய கீதாம்ருத — துஹே நம: ||

—கீதை தியான சுலோகம்

சரணடைந்தவர்களுக்கு விரும்பியதைத் தரும் கற்பக மரமாகவும், ஒரு கையில் சாட்டை ஏந்தியவனாகவும், ஞான முத்திரை காட்டுபவனாகவும், கீதை என்னும் அமுதத்தைக் கறப்பவனாக வும் விளங்கும் கிருஷ்ணனுக்கு நமஸ்காரம்.

ஊரிலேன் காணியில்லை உறவு மற்றொருவரில்லை
பாரில் நின்பாதமூலம் பற்றினேன் பரமமூர்த்தி
காரொளி வண்ணனே கண்ணனே கதறுகின்றேன்
ஆருளர் களைகண் அம்மா அரங்கமா நகருளானே

— திருமாலை





# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

முதலில் உனது இதயமாகிய கோவிலில் ஆண்டவனைப் பிரதிஷ்டை செய். முதன் முதலில் கடவுளை சாட்சாத்கரித்து அவனை உள்ளபடி அறிந்து கொள்.

'கீதா' என்ற சொல்லைப் பலமுறை, ''கீதா, கீதா, கீதா'' என்று அடுத்தடுத்துத் தொடர்ந்து அவசரமாகச் சொல்லிப் பார். 'தியாகி' என்று பொருள்படும். ''தாகி, தாகி'' என்ற சப்தம் வருவது போலக் கேட்கும். இவ்விதம் ஒரே வார்த்தையில் கீதையானது, 'உலகப் பற்றுள்ள மக்களே! துறவு கொள்ளுங்கள்; எல்லாவற்றையும் துறந்துவிட்டு, பகவானிடம் இதயத்தை நிலை நிறுத்துங்கள்' என்று போதிக்கிறது.

தன்னுடைய கல்வி, பணம் ஆகியவைகளைக் குறித்துக் கர்வம் கொள்பவனுக்கு ஈசுவர ஞானம் வருவதில்லை. அப்படிப்பட்டவனிடம், ''அங்கே ஒரு மகான் இருக்கிறார். நீ அவரைப் பார்க்க வருகிறாயா?'' என்று கேட்டால், அவன் நிச்சயம் ஏதாவது ஒரு சாக்குப்போக்கைச் சொல்லித் தான் வரமுடியாது என்று தட்டிக்கழிப்பான். அவன் தன்னைப் பெரிய மனிதன் என்றும், அப்படி ஒருவரைப் பார்க்கப் போவதால் தன்னுடைய அந்தஸ்துக்குக் குறைவு உண்டாகும் என்றும் நினைக்கிறான். இத்தகைய கர்வம் அவித்தையில் இருந்து உண்டாகிறது.

பருந்தும், கழுகும் ஆகாயத்தில் வெகு உயரத்தில் பறப்பதை நீங்கள் பார்க்கிறீர்கள். என்றாலும் அவைகளுடைய கண்கள் எப்போதும், எந்தக் குழிகளில் அழுகிய பிணங்கள் கிடக்கின்றன என்று கீழ்நோக்கிப் பார்த்தபடியே இருக்கின்றன. அதேபோலப் பண்டிதர்கள் என்று சொல்லப்படுபவர்கள் எவ்வளவுதான் சாஸ்திரங்களைப் படித்தவர்களாக இருந்தாலும், பெண், பொன் ஆசைகளாகிய உலகப் பற்றுகளுக்குப் பந்தப்பட்டவர்களாகவே இருக்கிறார்கள். ஆகவே தான் உண்மையான ஆத்ம தத்துவத்தைப்பற்றி ஒன்றுமே தெரிந்துகொள்ளாதவர்களாக இருக்கிறார்கள். அவர்களால் மெய்ஞானத்தைப் பெற இயலாது.

இரண்டு நண்பர்கள் ஒரு தோட்டத்திற்குச் சென்றார்கள். அவர்களில் ஒருவன் உலக விஷயங்களில் ஆழ்ந்த கவனம் உள்ளவன். அவன் தோட்டத்தில் நுழைந்த உடனே, அங்குள்ள மாமரங்களை எண்ண ஆரம்பித்தான்; ஒவ்வொரு மரத்திலும் எத்தனை பழங்கள் இருக்கின்றன என்று கணக்கிட்டான்; அதைக்கொண்டு அந்தத் தோட்டத்தின் மதிப்பு சுமார் எவ்வளவு ரூபாய் இருக்கும் என்று கணக்குப் போட்டான். அவனுடைய நண்பனோ, நேராகத் தோட்டக்காரனிடம் சென்று, அவனுடன் உறவு கொண்டாடி சிநேகம் செய்து கொண்டான்; பிறகு ஒரு மரத்தடிக்குச் சென்று தனது ஆவல் தீரப் பழங்களைப் பறித்துத் திருப்தியாகச் சாப்பிட்டான். இந்த இரண்டு நண்பர்களுள் யாரை நீ அதிக புத்திசாலி என்று நினைக்கிறாய்? மாம்பழங்களைச் சாப்பிடு; அதனால் உனது பசி அடங்கும். மரங்களையும் இலைகளையும் எண்ணி வீணாகக் கணக்குப் பார்த்துக் கொண்டிருப்பதில் என்ன பிரயோஜனம்? புத்தி வன்மையால் கர்வம் அடைந்தவன், கடவுளின் சிருஷ்டி ஏன் வந்தது, எங்கிருந்து வந்தது என்பதைக் கண்டுபிடிப்பதில் வீணாகப் பாடுபடுகிறான். ஞானமும் அடக்கமும் உள்ளவனோ, கடவுளுடன் உறவு கொண்டாடி தெய்விகப் பேரின்பமாகிய அவனுடைய வரப்பிரசாதத்தையே பெற்று அனுபவிக்கிறான்.



ஓம்



# விஜயதீபம்

## பணத்தின் மதிப்பு

1

'பணம் என்றால் பிணமும் வாயைத் திறக்கும்' என்பது பழமொழி. இது பணத்தின்மீது மக்களுக்கு உள்ள பெரும் ஈடுபாட்டை இரத்தினச் சுருக்கமாகத் தெரிவிக்கிறது.

மனிதனைப் பந்தப்படுத்தும் ஆசைகளில் வலிமை மிக்கது பணஆசை. மூவாசை எனப்படும் மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசைகளில் ஒன்றாகவும் பொன்னாசை கூறப்படுகிறது.

சம்ஸ்கிருதத்தில், புத்திர ஆசை, பண ஆசை, மறு உலகில் இன்பங்களை அடைய வேண்டும் என்ற ஆசை—ஆகியவைகளை மூன்று ஏஷணைகள் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதிலும் பண ஆசை தனக்குரிய இடத்தைத் தவறாமல் பிடித்துக்கொண்டிருக்கிறது. 'மூவேடனை என்று முடிந்திடுமோ? — இந்த மூன்று ஏஷணைகளாகிய ஆசைகளில் இருந்து எப்போது விடுபடப் போகிறேனோ?' என்று முருகப்பெருமானிடம் கந்தரனுபூதியில் முறையிடுகிறார் அருணகிரிநாதர்.

பணத்தின் மீதுள்ள பேராசை காரணமாக, மனிதன் பல அடாத காரியங்களையும் செய்யத் துணிந்து விடுகிறான். பலர் மனச்சாட்சியை விற்கவும் கொல்லவும் செய்கிறார்கள். இன்று நேற்று என்று இல்லாமல், காலமெல்லாம் உலக மக்கள் பண ஆசை காரணமாகப் பலவிதங்களிலும் அலைக்கழிக்கப்பட்டிருக்கிறார்கள். கிட்டத்தட்ட எல்லாத்துறைகளிலுமே பணம் விளையாடவும் தனது கைவரிசையைக் காட்டவும் செய்திருக்கிறது.

இராமாயணமும் மகாபாரதமும் இந்துக்களால் இதிகாசங்கள் என்று போற்றப்படுகின்றன. அவைகளில் இராமாயணம் பொன்னாசையால் விளையும் கேட்டை விளக்குகிறது. மண்ணாசையால் விளையும் கேட்டை மகாபாரதம் விளக்கி இருக்கிறது.

மண்ணாசையில், பொன்னாசை எனப்படும் பண ஆசையும் அடங்கி விடுகிறது. யுகாவதார புருஷராகிய பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், தெய்வத்தை அணுகுவதற்குத் தடையாக இருப்பவை 'காமமும் காஞ்சனமுமே' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

2

வயிற்றுப் பசி இருப்பது நம் அனைவருக்கும் தெரியும். இதைப்போல ஆன்ம பசி (Hunger of the soul) என்று ஒன்று இருக்கிறது. நம்மில் பெரும்பாலோருக்கு இப்படி ஒரு 'பசி' இருப்பதே தெரியாது. இப்போது வாழ்ந்து வரும் வாழ்க்கையிலேயே நாம் திருப்தி அடைந்து, காலம் எல்லாம் இப்படியே நாம் வாழ்வோமானால், ஆன்ம பசி என்பது நமக்குச் சுட்டுப் போட்டாலும் வராது.

அனுபூதிமான்கள், நல்ல சாதகர்கள் ஆகியவர்களை நாம் நேரில் பார்க்கும்போது, ஆன்ம பசி என்றால் என்ன என்பது — சிறிதளவாகிலும், கருத்தளவாகிலும் நமக்குப் புரியும். கடவுள்மீது பேரன்பு தலையெடுக்கும்போது மட்டுமே, ஆன்ம பசியை ஒருவன் உணர்கிறான். இதை **அருள்தாகம்** என்று சொல்கிறார் ஸ்ரீராமகிருஷ்ணர்.

ஆன்ம பசி ஏற்பட்டு விடுமானால் பண ஆசைக்கு ஒருவன் பலியாகிவிட மாட்டான். அவ்விதம் ஆன்ம பசி ஒருவனுக்கு இல்லாமல் போனால், பண ஆசை மட்டுமல்ல, பட்டியலே போட்டு மாளாத எல்லாவித ஆசைகளுமே இறக்கை கட்டிக்கொண்டு பறந்து வந்து அவனுடைய இதயத்தில் குடிபுகுந்து விடும்.

எந்த மதத்தை, அல்லது மதப் பிரிவைப் பின்பற்றினாலும், கடவுள் நிலையைப் பெற விரும்புபவர்கள் பண ஆசையிலிருந்து விடுபடவும் அருள் தாகத்தை வளர்த்துக் கொள்ளவும் வேண்டும். இது, மத வாழ்க்கையைப் பொறுத்த மட்டில் ஒரு தவிர்க்கமுடியாத விதியாகவே இருக்கிறது எனலாம்.

ஒருமுறை, ஒரு பணக்காரன் பகவான் இயேசு கிறிஸ்துவிடம் வந்திருந்தான். இயேசு பெருமான், 'உன்னுடைய செல்வங்களை எல்லாம் விற்று, ஏழை எளியவர்களுக்குத் தானம் செய்துவிட்டு என்னைப் பின்தொடர்வாயாக!' என்று கூறினார். ஆனால், கிறிஸ்து பெருமானே சொல்லியும்கூட, அந்தப் பணக்காரனால் அதன்படி செய்ய முடியவில்லை. அவனுக்கு இருந்த பண ஆசையே அவனுடைய அருள் உலக வாழ்க்கைக்குத் தடையாக அமைந்தது.

''கடவுளுக்கும் காசுதேவனுக்கும் ஒருவன் ஒரேசமயத்தில் தொண்டு செய்யமுடியாது.''

''ஊசியின் காதில் ஒட்டகம் நுழைந்தாலும், பணக்காரன் ஆண்டவனின் அருள் உலக அரசுக்குள் நுழைய முடியாது'' என்றெல்லாம் இயேசுநாதர் எடுத்துக் கூறுவதன் மூலம், மத வாழ்க்கையைக் கடைப்பிடிக்க விரும்புபவர்கள் பண ஆசைக்குப் பலியாகாமல் இருக்கும்படி எச்சரித்திருக்கிறார்.

பண ஆசைஉள்ளவன், மரணமில்லாப் பெருவாழ்வாகிய அமர நிலையைப் பெற முடியாது. இதைத் தெளிவாகவும் நுட்பமாகவும், மிக மிகப் பழைய காலத்திலேயே நமது நாட்டில் வாழ்ந்த தீர்க்கதரிசிகள் உணர்ந்திருக்கிறார்கள். 'கர்மத்தால் அல்ல, மக்களைப் பெறுவதால் அல்ல, **செல்வத்தால் அல்ல** — துறவு மனப்பான்மையால் மட்டுமே அமர நிலை அடையப்படுகிறது' என்பது வேத வாக்கு.

3

**தெ**ய்வத்தை உள்ளபடியே ஒரு சிறிது உணர்ந்துகொண்டாலும், பண ஆசை உட்பட பொதுவாக எல்லா ஆசைகளுமே ஒருவனை விட்டு நழுவ ஆரம்பித்துவிடும். 'ராமன் உள்ள இடத்தில் காமன் இல்லை; காமன் உள்ள இடத்தில் ராமன் இல்லை.'

உயர்ந்த பண்புகளாகிய பிராம்மணத்துவம் கொண்டவர்களே இந்தியாவின் இலட்சிய புருஷர்கள் ஆவார்கள். அருட்செல்வம் நிறைந்த அவர்களுடைய இலட்சணங்களில் ஒன்றாக, இயல்பாகவே வறுமையும் இடம் பெற்றிருக்கிறது.

மத வாழ்க்கையில் ஈடுபடுபவர்கள் கற்பு, வறுமை, கீழ்ப்படிந்து நடத்தல் ஆகிய பண்புகளை அவசியம் கொண்டிருக்கும்படி கிறிஸ்தவ சமயம் அறிவுறுத்துகிறது.

இந்த வகையிலான ஏழை எளியவர்கள் ஆண்டவனின் திருவருளுக்கு விரைவில் பாத்திரர்கள் ஆவார்கள். ஆகவே அவர்களை 'பாக்கிய சாலிகள்' என்று கிறிஸ்தவ மதம் கூறுகிறது. இந்து மதமோ அவர்களை வழிபாட்டுக்கு உரியவர்களாகவே மதிக்கிறது.

அப்படியானால், பக்தர்களாக இருப்பவர்கள் வறுமையில் வாடுபவர்களாகத்தான் இருக்க வேண்டும் என்பது பொருள் அல்ல. வறுமையில் வாடுவது மட்டுமோ, செல்வத்தில் திளைப்பது மட்டுமோ, இலட்சியமாகிய கடவுள் சாட்சாத்காரத்தைப் பெற்றுத் தந்து விடாது. வறுமை, செல்வம் ஆகிய இரண்டையும் கடந்து இவற்றிற்கு மேலாகத் தலைதூக்கி நிற்கும் ஏதோ ஒரு தெய்விகப் பண்புதான், அருள்தாகம்தான் இலட்சியத்தை அடையத் துணைபுரிய முடியும்.

பொருட்செல்வம் இருந்தாலும் இல்லாவிட்டாலும், அருட்செல்வத்தை நாடுபவர்கள் பொருட்செல்வத்தின்மீது பற்றுக்கொண்டிருக்க மாட்டார்கள். பொருட்செல்வம் இருப்பினும், தாமரை இலை நீர்போல பந்தப்படாமல் வாழ்வார்கள்; வாழ வேண்டும்.

'பாலத்தின் கீழே, தண்ணீர் தங்கி நில்லாமல், எப்போதும் ஓடிக்கொண்டே இருக்கிறது. அதுபோல, பணமானது பற்றற்றவர்கள் கையிலிருந்து செலவாகிக் கொண்டிருக்குமே அல்லாமல், அவர்களால் ஒருபோதும் அது சேமித்து வைக்கப்படுவதில்லை' என்கிறார் ஸ்ரீராமகிருஷ்ணர்.

குடும்ப வாழ்க்கையில் உள்ள ஒருவர் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு துர்க்காசரண நாகமகாசயரையும், சன்னியாச வாழ்க்கை ஏற்றுக்கொண்ட ஒருவர் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு சுவாமி விவேகானந்தரையும், தலைசிறந்த உதாரணங்களாக ஸ்ரீராமகிருஷ்ணர் உலக மக்களின் முன்பு வைத்திருக்கிறார்.

பணம் சேர்ப்பதே வாழ்க்கையின் முதலும் முடிவுமாகிய இலட்சியம் அல்ல. கடவுள் சாட்சாத்காரம் என்பது ஒன்றுதான் வாழ்க்கையின் இலட்சியம். அந்த இலட்சியத்திற்குத் துணை புரியும்வகையிலும் பிறழாதவகையிலும் மட்டுமே பொருட்செல்வம் அமைதல் வேண்டும்.

தேவையான அளவுக்கு நேர்மையான முறையில் பணம் சம்பாதிப்பது, அதைக்கொண்டு சுயநலத்திற்கு இடம்கொடுத்து விடாமல் தர்மத்திற்குட்பட்ட வகையிலே குடும்பத்தை நிர்வகிப்பது, ஆண்டவனுக்கும் ஆண்டவனின் அடியார்களுக்கும் செலவு செய்வது — இந்த வகையான சிறப்பான வாழ்க்கைமுறை மனிதனைப் பந்தப்படுத்தாது. மாறாக பந்தத்திலிருந்து விடுவிக்கவே செய்யும்.

பணம் தன்னளவில் நல்லதும் இல்லை; கெட்டதும் இல்லை. பணத்தின் மீதுள்ள பற்றுதல் தான், மனிதனைத் தாழ்த்தி விடுகிறது.

'தண்ணீரில் படகு இருக்கலாம். படகில் தண்ணீர் நுழைந்தால் படகு மூழ்கிப்போகும்' என்கிறார் ஸ்ரீராமகிருஷ்ணர். குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள ஒருவருக்கு, தர்மத்திற்குட்பட்ட வகையில் வருவாயும் செலவும் அமைவது, தண்ணீரில் மிதக்கும் படகு போல நன்மையைத் தரும். பணத்தின் மீதுள்ள பற்றுதல், படகில் நுழையும் தண்ணீர் படகையே அமிழ்த்தி மூழ்கச் செய்வதைப் போல, ஒருவனை சம்சாரத்தில் ஆழ்த்தவே செய்யும்.

'விஷப் பாம்புகள் நடமாடும் வீட்டில் வசிப்பவர்கள் எப்போதும் வெகு ஜாக்கிரதையாக இருப்பதைப்போல, உலகத்தில் வாழும் மக்கள் காமத்துக்கும் பண ஆசைக்கும் உட்படாமல் எப்போதும் மிகமிக ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும்' என்னும் ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசம் பக்தி வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளவர்களின் ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

4

சுடும் தன்மையும், ஒளியும், நெருப்பினுடைய அடிப்படையான இயல்புகள். குளுமையும், ஈரமும், தண்ணீர் உடைய அடிப்படையான இயல்புகள். அதைப்போலவே, புறத்தளவில் மனிதன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும், அடிப்படையில் மனிதனின் உண்மையான இயல்பு தெய்விகமே ஆகும்.

எந்த இயல்பு, எப்போது ஒருவனைவிட்டுப் பிரிந்தாலும், அவனிடம் உள்ள அடிப்படை இயல்பாகிய தெய்விகம் ஒருநாளும், எந்த நிலையிலும் அவனை விட்டுப் பிரியாது. பிரபஞ்சத்தில் உள்ள எந்த சக்தியாலும் அவனுடைய உண்மை இயல்பாகிய தெய்விகத்தில் இருந்து அவனை வேறுபடுத்த முடியாது. ஒருவன் தானாகவே விரும்பி எப்படிப்பட்ட முயற்சிகளை மேற்கொண்டாலும்கூட, தன்னுடைய உண்மை இயல்பாகிய தெய்விகத்திலிருந்து தன்னை வேறுபட்டவனுக்கிக் கொள்ள முடியாது.

பல வடிவங்களிலும் உள்ள பித்தளைப் பாத்திரங்களில், குறைந்த அளவுக்கோ அல்லது அதிகமான அளவுக்கோ களிம்பு ஏறி இருக்கலாம். அந்த நிலையில், பாத்திரங்கள் களிம்பு என்னும் தனக்கு வேறுபட்டதும், சொந்தம் இல்லாததுமாகிய உபாதிகளுடன் கூடியிருக்கின்றன.

போதுமான அளவுக்குப் பாத்திரங்களைத் தேய்த்துச் சுத்தப்படுத்தும் முயற்சிகளை எடுத்துக்கொண்டால், உபாதிகளாக விளங்கும் களிம்பை நீக்கி விடலாம். ஆனால் பித்தளைக்கே உரிய அடிப்படை இயல்புகளை எத்தகைய முயற்சிகளை மேற்கொள்வதன் மூலமும் நீக்க முடியாது. அதேபோல, மனிதனிடமிருந்து தெய்விகத் தன்மையை எந்த நிலையிலும் அவனிடம் இருந்து பிரிக்கவே முடியாது. காரணம், உண்மையில் அவன் தெய்வமே ஆவான்.

மனிதன் உண்மையில் ஆத்ம சொரூபம். ஆனால், அதை—அவன் பல உபாதிகளை உண்டாக்கிக் கொண்டுவிட்டதன் காரணமாக, தான் அல்லாதவைகளைத் தான் என்று எண்ணி மயங்கி அவித்தை வாழ்க்கை வாழ்வதன் காரணமாக— உணராதவனாக இருக்கிறான். அஞ்ஞானத்தில் உள்ள அவனது நிலை, புலிக்குட்டி ஒன்று ஆடுகளுடன் சேர்ந்து ஆடுகளைப் போலவே வாழ்வதைப்போல இருக்கிறது.

மனிதனின் சுயசொரூபமாகிய ஆத்மாவை மறைக்கும் பல உபாதிகளில் செல்வச்செருக்கும் ஒன்று. 'அவன் தனது பணமே தன்னைக் காப்பாற்றி விடும் என்று நினைத்துக்கொண்டிருக்கிறான். ஆனால் அவன், அல்லாவிடம் இருந்து கடுமையான தண்டனையைப் பெறப் போவது உறுதி' என்று இஸ்லாம் சமயம் பணத்தின்மீது பற்று கூடாது என்று எச்சரிக்கை தருகிறது.

'வேடன் காலடியில், குரங்கு தனது பிராணனை விடுவதைப் போல, அழகிய ஸ்திரீயின் காலடியில் மனிதனும் தன் பிராணனை விடுகிறான்' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் குறிப்பிட்டார். இந்த உண்மை பண ஆசைக்கும் முற்றிலும் பொருந்துவதாக உள்ளது.

ஓடியாடி அல்லல்பட்டு, ஆயிரம்தான் அம்பாரமாகக் குவித்தாலும் ஆறடி நிலத்தில் மட்டுமே அடங்கவேண்டியவன் மனிதன். 'தேடும் திரவியமும் சேர்ந்த மணிப்பெட்டகமும் கூட வரும் துணையோ கூறாய் பராபரமே' என்று தாயுமானார் கேட்கிறார். 'கூடுவிட்டு இங்கு ஆவிதான் சென்ற பின்பு யாரோ அனுபவிப்பார் பாவிகாள்! அந்தப் பணம்' என்ற அவ்வைப் பாட்டியின் அறிவுரையை அறியாத பருவத்திலேயே படித்திருக்கிறோம். 'காதறுந்த ஊசியும் கடைவழிக்கு வாராது காண்' என்ற அறிவுரையை நினைவில் வைத்தால் எவ்வளவோ கேடுகள் குறையவாவது செய்யும்.

(இந்த இதழில் சொல்லப்பட்ட கருத்து, மற்றொரு சமயம் விஜய தீபத்தில் மீண்டும் ஆராயப்படும்.)



# ஆறுதல் மொழிகள்

**தூய அன்னை ஸ்ரீசாரதாதேவியார்**

> சீடர் ஒருவரின் கேள்விகளுக்கு, ஸ்ரீ அன்னையார் அளித்த பதில்கள் 'ஆறுதல் மொழிகள்' என்னும் தலைப்பில் இடம் பெறுகின்றன.

**ஸ்ரீ அன்னையார்:** ''ஒருநாளும் பயப்படாதே. அவன் எக்காலும் உன்னைப் பார்த்துப் பராமரித்து வருகிறான். அவனிட்ட காரியத்தைச் செய். சாதனை செய். தினமும் சிறிது வேலைகள் செய்வதே மனதிலிருந்து வீண் எண்ணங்களை விரட்டும். தனியாக, காரியமில்லாமல் இருந்தால்தான், மனதில் பலவித சஞ்சலங்களுக்கும் வியர்த்தமான யோசனைகளுக்கும் இடம் கொடுத்துப் போகும்.''

**அடியார்:** ''நான் எங்கே, எப்படி சாதனை செய்யட்டும்?''

**ஸ்ரீ அன்னையார்:** ''உனக்கேற்பட்ட இடம் வாரணாஸி(காசி). சாதனை என்றால் பகவானிடமே மனதை ஆழ ஆழ முழுக்கி, பகவத் ஸ்மரணத்திலேயே ஒருமுகப்படுவது என்று அர்த்தம். பகவந்நாமாவைச் சொல்லிக் கொண்டே இரு.''

**அடியார்:** ''எனக்கு பகவானிடம் பிரேமை ஏற்படாமலே, வெறுமே நாமாவை மட்டும் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தால் பயனுண்டா என்ன?''

**ஸ்ரீ அன்னையார்:** 'நீ தண்ணீரிலே விழுந்தாய் என்று வைத்துக்கொள். நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் உன் துணிகள் ஈரமாகத் தான் செய்யும். (அப்படித்தான் இதுவும்). இப்போது உன் மனம் பக்குவமாகவில்லை. ஸ்திரப்படவில்லை. ஆனால் விடாமல் தியானம் பயின்று வந்தால் ஸ்திரத்தன்மையும் அமைதியும் ஏற்படும்.

''எப்போதும் எது நல்லது, எது கெட்டது என்று சீர்தூக்கிப் பார்த்துக்கொண்டே இரு. மனம் எப்போதெப்போது பகவானுக்கு இதரமாக ஒன்றிப் போகின்றதோ, அப்போதப் போதும் இதெல்லாம் சாசுவதமல்ல என்று நினைவுகொண்டு ஆண்டவனின் புனிதப் பாதங்களில் இதயத்தை சமர்ப்பித்து வா. தூண்டில் போட்டு மீனையே எதிர்பார்த்துக் கொண்டிருந்த வலைஞன், பக்கத்திலே சென்ற கல்யாண ஊர்வலத்தின் பெரிய ஆரவாரத்தைக் கூடக் கேட்கவேயில்லை என்று ஒரு கதை சொல்வார்களே, அந்த வலைஞனைப்போல இரு.''

**அடியார்:** ''வாழ்க்கையின் லட்சியம் என்ன?''

**ஸ்ரீ அன்னையார் :** ''பகவானை அநுபவத்தில் தெரிந்து கொள்வது. அவனது உணர்விலேயே தடை யுறாமல் ஈடுபட்டிருப்பது. இதுதான் லட்சியம்.''

**அடியார் :** ''அம்மா, நான் பிராணாயாமப் பயிற்சி தொடங்கியுள்ளேன் .அதில் தொடரட் டுமா?''



**ஸ்ரீ அன்னையார் :** ''ஆமாம். இன்னம் சற்று இதே பயிற்சியை நீ செய்யலாம். ஆனால் அதிகம் வேண்டாம். அதிகம் செய்வதால் மூளை கொதிப்பு உண்டாகவும் கூடும். மனம் தானாக சாந்தப்பட அறிந்து விட்டால் பிராணா யாமம் எதற்கு?''

**அடியார் :** ''ஆனால், அம்மா, குண்டலினி விழித்தெழுந்தாலொழிய எதுவுமே சாதிக்கப் படுவதில்லை என்கிறார்களே!''

**ஸ்ரீ அன்னையார் :** ''வாஸ்தவம்தான். ஆனால் குண்டலினி நிச்சயம் தானே விழித்தெழுவாள். விடாமல் பகவந்நாமாவைச் சொல்லிக் கொண் டேயிரு. சகலமும் தானே சரியாக வந்துசேரும். உன் மனம் நிற்காவிட்டாலும் கூட கோடிக் கணக்கில் நாமத்தைச் சொல்லிக்கொண்டே வா. ஒருநாள், குண்டலினி விழிப்புறு முன் அநாஹத த்வனியைக் கேட்பாய்.* ஆனால் எதுவுமே சர்வேஸ்வரியின் கிருபையைச் சார்ந்து தானிருக்கிறது. சமீபத்தில், ஒருநாள் அதிகாலை யில் எனக்கென்னவோ (தானாக) (காசி) விச்வ நாத சிவலிங்கத்தின் காட்சி ஸித்தித்தது.''

**அடியார் :** ''ஆனால் அம்மா, எங்களுக்கு இப் போதெல்லாம் சிவனின் இந்த கற்சின்னங்கள் திருப்தி தருவதில்லை.''

**ஸ்ரீ அன்னையார் :** ''அப்படி இல்லை, என் குழந் தாய். இவை யாவும் ஸத்தியமே. வாராண ஸிக்குச் செல்லும் மகாபாவிகள் பலரும் விச்வ நாதர் லிங்கத்தை ஸ்பரிசிப்பதால் வாஸ்தவமா கவே பாவ விமோசனம் பெறுகிறார்கள். அவன் அனைவருடைய பாவங்களையும் பரம கிருபை யுடன் ஏற்றுக்கொள்கிறான். சனி, ஞாயிறுகளில் எல்லா விதமான மக்களும் என்னிடம் வந்து வணங்கி என் காலைத் தொடுகிறார்கள். இதனால் என் கால் எரியத் தொடங்குகி. . . .''

பக்தர் ஒருவர் அடிக்கடி மடத்துக்கு வந்து ஸ்ரீதூய அன்னையை தரிசித்துச் செல்வது வழக் கம். திடீரென அந்த பக்தர் வருவது நின்று விட்டது. இந்த மாற்றம் மர்மாக இருந்தது. நான் அன்னையிடம் இதன் காரணத்தைக் கேட் டேன். ஸ்ரீஅன்னையார் சொன்னார்: ''அது அவ னுடைய பூர்வ கர்மா. அதன்படி. கடைசியில் அதற்கே வசமாகிவிட்டான்''

''சரி, அப்படியானால், எல்லாமே பகவா னின் ஸங்கல்பப்படி நடக்கிறதெனில், அவர் ஏன் கர்மாவை அழிக்கக்கூடாது?'' என்று கேட் டேன்.

அன்னையார் மீண்டும் சொன்னார்: ''ஆமாம் அவன் ஸங்கல்பித்தால் கர்மாவையும் அழிக்க முடியும். ஆயினும் குருமகராஜ் போன்றவர் களின் விஷயத்தில் கூடக் கர்மாவை அனுப வித்தே தீர்க்க வேண்டியிருக்கிறது என்பதைப் பாரேன். அவருடைய அண்ணா (ராம்குமார்) விஷ ஜுரத்தில் மிகவும் கஷ்டப்படுகையில் நிறையத் தண்ணீர் குடித்துக்கொண்டே இருந் தார். இதனால் காய்ச்சல் தீவிரமாகும் என்று பயந்த குருமகராஜ் தம்ளரை அவர் கையி லிருந்து வலிந்து பிடுங்கிக்கொண்டார். அண்ணா வுக்கு இது கோபமூட்டியது. அவர், ''இப் போது நீ எனக்குத் தீர்த்தம் மறுத்ததனால், உன் அந்திம காலத்தில் உன்னால் எதையுமே உண்ண முடியாமல் போகட்டும்'' என்றார். குருமகராஜ் சொன்னார்: ''நான் உன் நன்மைக்

*உன்னத உணர்வு நிலையில் கேட்கப்படும் ப்ரணவ நாதம், ஓங்காரம்.

காகவே செய்தேன். நீ ஏன் எனக்கு சாபமிட்டாய்?'' இதைக் கேட்டதும் அண்ணு அழ ஆரம்பித்துவிட்டார். ''என் வாயிலிருந்து ஏன் இப்படி ஒரு சாபம் வந்ததென்று எனக்குத் தெரியவில்லையே'' என்ருர். அதெப்படியாஞலும் அந்த சாபம் என்னவோ பிற்பாடு நிறைவேறத்தான் செய்தது. குருமகராஜ் கூடத் தமது கர்மாவுக்கு அனுபவிக்க வேண்டியதாயிற்று. அவரது இறுதிக் காய்ச்சலின்போது அவரால் எதையுமே உட்கொள்ள முடியவில்லை. . . . . . .''

**அடியார்:** ''ஜபிக்கும்போது நான் எண்ணிக்கைக்குக் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டுமா?''

**ஸ்ரீ அன்னையார்:** ''வேண்டாம். எண்ணுமலே ஜபி. ஏனெனில் அநேகமாக, எண்ணுவது ஜபத்திலிருந்தே கவனத்தை அலைக்கழிக்கக் கூடும்.''

**அடியார்:** ''எதனுல் ஜபமானது என்னை பகவானுடன் ஆழ்ந்து லயித்திருக்கும் நிலைக்கு இட்டுச் செல்லவில்லை?''

**ஸ்ரீ அன்னையார்:** ''செல்லும், செல்லும்—ஆனுல் மெல்ல மெல்லத்தான். மனம் ஒத்துழைக்காவிடினும், நிலைப்படாவிடினும்கூட ஜபம் செய்வதை விட்டு விடாதே. நீ தொடர்ந்து உரு ஏற்றிக்கொண்டே போக வேண்டும். இப்படிச் செய்தால் படிப்படியாக மனம் நிலைப்பட்டு வருவதை — காற்றில்லா இடத்து தீபம் போல ஆடாமல் நிற்பதை— உணரத் தொடங்குவாய். காற்றில் சற்று சலனம் கூடிஞலும் தீபத்தின் நிலைத்த கொழுந்தைச் சஞ்சலிக்கச் செய்யும்; இவ்விதமே எந்தச் சிந்தனையோ, ஆசையோ எழுந்தால் அது மனதை நிலைதவறச் செய்யும். மந்திரத்தைச் சரியாக உச்சரிக்க வேண்டும். உச்சாரணக் கோளாற்றிஞல் முன்னேற்றம் தடைப்படும். ஒரு பெண்ணுக்கு உபதேசமான மந்திரத்தில் 'ருக்மிணி நாதாய' என்பது ஒரு பகுதி. ஆனுல் அவள் ('ருக்மிணி' என்பதை) 'ருகு' என்றே ஜபித்து வந்தாள். இது அவளது முன்னேற்றத்தை பாதித்தது. ஆனுலும் பிற்பாடு பகவான் அநுக்கிரஹத்தால் அவள் மந்திரத்தைத் திருத்தமாக அறிந்தாள்.''



**சகோதரி நிவேதிதாவின் வாழ்வும் பணியும்**

# அமெரிக்க அனுபவங்கள்

நிவேதிதாவும், விவேகானந்தரும், துரியானந்தரும் பிரயாணம் செய்த கப்பல் 1899 ஜூலை 31 அன்று லண்டனை அடைந்தது. பிரயாணம் ஆறுவார காலம் நீடித்தது.

இந்தப் பிரயாணத்தை நிவேதிதா தம்முடைய வாழ்வின் மிக முக்கிய நிகழ்ச்சி என்று கருதிஞர். விவேகானந்தரின் தொடர்பு காரணமாகவே அவர் அவ்விதம் நினைத்தார். 'உலகம் சுற்றும் பிரயாணம் குரு ஒருவரோடு சேர்ந்து செய்யப்படும்போது, அது புண்ணிய தீர்த்தாடனமாகவே அல்லவா ஆகிவிடுகிறது!' என்று அவர் எழுதியுள்ளார்.

லண்டன் செல்லும் வழியிலே கப்பல் சென்னை வந்து சேர்ந்தது. விவேகானந்தரைத் தரிசிப்பதற்குப் பல அன்பர்கள் துறைமுகத்திற்கு வந்திருந்தார்கள். ஆனுல் கல்கத்தாவிலே அப்போது பிளேக்நோய் பரவியிருந்ததால் கப்பலில் இருந்தவர்கள் கீழே இறங்கி வரக்கூடாது என்று அதிகாரிகள் தடுத்துவிட்டார்கள். ஆகவே படகுகளில் இருந்தபடியே அன்பர்கள் கப்பலில் இருந்த விவேகானந்தரை தரிசித்துத் திருப்தியடைய வேண்டியவர்களாயினர். சுவாமி ராமகிருஷ்ணனந்தரும் அவர்களுள் ஒருவர்.

கொழும்பிலும் கப்பல் தங்கியது. அங்கு சுவாமி விவேகானந்தருக்கு மிகப்பெரிய அளவில் வரவேற்பு கொடுத்தார்கள்.

அப்போது தென்மேற்குப் பருவக் காற்றுக் காலம். ஆகவே கப்பல் ஏடனுக்குச் செல்லும் வழியில் வெகுவாக ஆட்டம் கொடுத்தது. ஆறு

நாட்களில் ஏடனை அடைய வேண்டிய கப்பல், பத்து நாட்களுக்குப் பிறகுதான் அடைந்தது.

விவேகானந்தர், நிவேதிதாவோடும் துரியானந்தருடனும் உரையாடுவதிலேயே தமது நேரத்தின் பெரும்பகுதியைச் செலவிட்டார். ஓய்வுகிடைத்த சமயங்களில் நிவேதிதா எழுத்து வேலையிலும், தையல் வேலையிலும் ஈடுபட்டிருந்தார்.

'எனது உடல்நலத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்காக நான் ஒழுங்காக உடற்பயிற்சி செய்ய வேண்டும். நான் அவ்விதம் செய்ய மறந்துவிட்டாலும் எனக்கு உடனே ஞாபகப் படுத்துங்கள்' என்று விவேகானந்தர் துரியானந்தரிடம் கூறி இருந்தார்.

கொஞ்ச காலம் விவேகானந்தர் உடற்பயிற்சி செய்து வந்தார். ஆனால் பிறகு பேச்சு இன்பத்திலே அவ்விதம் செய்யத் தவறி வந்தார். துரியானந்தர் அவருக்கு நினைவுபடுத்தினாலும் 'இன்று முடியாது. கப்பலில் எனது உடல்நிலை நன்றாகவே இருக்கிறது. அதோடு இப்போது நான் நிவேதிதாவுடன் பேசிக் கொண்டு இருக்கிறேன். அவள் அயல்நாட்டுப் பெண். தன்னுடைய நாட்டைவிட்டு, இந்த விஷயங்களைப் பற்றி எல்லாம் என்னிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்வதற்காகவே வந்திருக்கிறாள். அவள் மிகவும் புத்திசாலி. அவளுடன் பேசுவதிலே எனக்கு மிகுந்த இன்பம் ஏற்படுகிறது' என்று சொல்லி விடுவார்.

இந்துமதக் கொள்கைகள் பற்றிய பல கதைகளை விவேகானந்தர் நிவேதிதாவுக்கு எடுத்துச் சொன்னார். இந்திய முனிபுங்கவர்களைப் பற்றியும் மற்ற பெரியார்களைப் பற்றியும் கூறினார். 'கடற்பிரயாணம் துவங்கியதிலிருந்து முடியும் வரையிலும், உயர்ந்த சிந்தனைகளும் கதைகளும் சுவாமி விவேகானந்தருடைய வாக்கிலிருந்து வெளிவந்தபடியே இருந்தன' என்று நிவேதிதா குறிப்பிட்டிருக்கிறார்.

கேட்ட விஷயங்களைப் பற்றிக் குறிப்பு வைத்துக்கொள்வது நிவேதிதாவின் வழக்கம். இந்தக் குறிப்புகள் பிறகு நூல்கள் எழுதுவதற்கு அவருக்கு மிகவும் பயன்பட்டன. 'என்னுடைய நூல்கள் இருக்கின்றனவே — அவைகள் சுவாமி விவேகானந்தருடையவைகளே என்பது உங்களுக்குத் தெரியும். அவர் நூல்கள் எழுதுவதற்குரிய ஆற்றலையும் எனக்குக் கொடுத்தார். ஊக்கத்தையும் அளித்தார்' என்று நிவேதிதா, திருமதி புல் அம்மையாருக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிடுகிறார்.

விவேகானந்தரின் பொன்னான பல கருத்துக்களைத் தான் ஏற்றுப் பயன் அடைவதோடுகூட, அவைகளை உலக மக்களுக்கு எடுத்து வழங்குவதையும் தமது புனிதக் கடமையாகக் கருதினார் நிவேதிதா.

கடற்பிரயாணம் விவேகானந்தருக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. அவரது உடல் நிலையும் வெகுவாகத் தேறியது. வங்க மொழியில் கட்டுரைகள் எழுதி உத்போதன் பத்திரிகைக்கு அவர் அனுப்பி வந்தார். இந்தக் கட்டுரைகள் பிற்காலத்திலே 'பரிவ்ராஜகர்' என்ற பெயரில் புத்தகமாக வெளிவந்தன.

லண்டன் வந்த சுவாமிகளுக்கும் நிவேதிதாவுக்கும் அன்பு ததும்பும் வரவேற்புக் கிடைத்தது. அமெரிக்க மாதர் இருவர் விவேகானந்தரைச் சந்திப்பதற்கென்றே கடல் கடந்து வந்திருந்தார்கள். நிவேதிதாவினுடைய வீட்டிலேயே சுவாமிகள் முதலில் தங்கினர். நிவேதிதாவினுடைய தம்பியான ரிச்மண்ட் என்பவர், விவேகானந்தரிடம் பெருமதிப்புக்கொண்டவரானார்.

சில நாட்களுக்குப் பிறகு விவேகானந்தர் அமெரிக்கா சென்றார். துரியானந்தரும் இரு அமெரிக்க மாதரும் அவருடன் சென்றார்கள். நிவேதிதா இங்கிலாந்திலேயே தங்கிக்கொண்டார். அப்போது அவருடைய தங்கைக்குத் திருமணம் நடைபெற இருந்தது.

மகான் ஒருவருடன் தொடர்பு கொள்ளும் பாக்கியம் பெறும் சிலர், நீடித்து அந்தத் தொடர்பைக் காப்பாற்றிக் கொள்ளுவதில்லை. இது ஒருசிலருடைய சிறுமைகளுள் ஒன்றாகும்.

லண்டனில் விவேகானந்தருக்கு ஈ.டி. ஸ்டர்டி என்ற நண்பர் ஒருவர் இருந்தார். முதலில் அவர் விவேகானந்தரிடம் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தார். ஆனால், இப்பொழுது சுவாமிஜி லண்டன் வந்தசமயம் அவர் லண்டனை விட்டே வெளியே சென்று விட்டார். திருமதி ஜான்ஸன் என்ற பெண்மணியும் இவ்விதமே செய்தார்.

நிவேதிதாவுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் ஸ்டர்டி விவேகானந்தரைக் குறைகூறி எழுதி

யிருந்திருந்தார். நிவேதிதா கோபமாக அவருக்குப் பதில் விடுத்தார். காரசாரமாகச் சில கடிதங்களைப் பரிமாறிக் கொண்ட பிறகு, இருவரும் தங்களுடைய நட்பையே முறித்துக் கொண்டு விட்டார்கள். திருமதி ஜான்ஸனும் குமாரி முல்லரும் இதைப்போலவே விவேகானந்த நட்பு வட்டத்திலிருந்து வெளியே சென்றனர். 'ஞானப்பண்பு உடைய யாருமே நோய் வாய்ப்படக்கூடாது. ஆனால் விவேகானந்தரோ நோய் வசப்படுகிறாரே' என்பது அவர்களுடைய வாதம்! ஆன்மிக பண்புக்கும், ஸ்தூல உடல் நோய்வாய்ப்படுவதற்கும் சம்பந்தமே இல்லை என்ற உண்மை இந்தப் பேதையருக்குப் புலப்படவில்லை.

கொஞ்ச காலம் கழிந்ததும் நிவேதிதாவும் அமெரிக்கா சென்றார்.

இந்தியாவிலே நிவேதிதா செய்து வந்த கல்விப் பணியைக் குறித்துச் சில அமெரிக்கர்களுக்கு ஏற்கனவே தெரிந்திருந்தது. அந்தப் பணிக்கு அமெரிக்கருடைய ஆதரவை மேலும் பெருமளவில் பெறுவதற்காகவே நிவேதிதா அமெரிக்கா வந்திருந்தார். அவர் ஆற்றிய பணி விவேகானந்தருடைய பணியே அல்லவா?சிறிது காலம் ஏகாந்தமாக தனிமையில் வாழ்ந்தும், தவம் செய்தும் பிரம்மசரிய விரதத்தில் முன்னேற வேண்டும் என்று நிவேதிதா தீர்மானித்தார். விவேகானந்தர் இதை அங்கீகரித்தார். 'சாந்தி' என்ற வேதாந்தக் கருத்துக்கள் அடங்கிய ஒரு பாடலை அவர் நிவேதிதாவுக்கு அளித்தார்.

'காளியன்னை' என்ற புத்தகத்தை நிவேதிதா எழுதி முடித்தார். அதை வீரேஸ்வரப் பெருமானுக்கு அர்ப்பணம் செய்தார்.

நிஷ்காம கர்ம யோகத்தை வாழ்க்கையில் ஏற்றுக் கடைப்பிடிக்கும்படி நிவேதிதாவுக்கு உபதேசம் செய்தார் விவேகானந்தர். உத்தமமான கர்மயோகியின் லட்சணங்கள் யாவை என்றும் அவர் விளக்கினார். சிவபிரானைப் பற்றியும் சுகதேவரைப் பற்றியும் அடிக்கடி சிறப்பாகப் பாராட்டிப் பேசினார். சக்தி தேவியை உபாசித்துப் பலம் பெறும் வழியை எடுத்துச் சொன்னார்.

இந்தியப் பெண்மணிகள் தங்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்து வந்த லட்சியங்களின் மேன்மை பற்றி அமெரிக்க மாதருக்கு விளங்க வைப்பது நிவேதிதா ஏற்றுக்கொண்ட பணிகளில் ஒன்றாக இருந்தது. தாம் ஏற்ற கைங்கரியத்தைச் சிறப்பாகச் செய்து முடிப்பதில் நிவேதிதா பெரிதும் ஊக்கம் கொண்டிருந்தார்.

எந்த வேலையை ஆரம்பிப்பதற்கு முன்பும், எந்தப் பிரயாணத்தைத் துவங்குவதற்கு முன்பும், துர்க்காவின் நாமத்தை உச்சரித்துக்கொள் என்று நிவேதிதாவுக்கு விவேகானந்தர் அறிவுரை கூறினார். நிவேதிதாவும் அவ்விதமே செய்து வந்தார்.

நிவேதிதா பல சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். இந்தியாவைப் பற்றி அமெரிக்கருக்குப் பல செய்திகளை எடுத்துச் சொன்னார். பால கிறிஸ்து, துருவன், பிரகலாதன், கோபாலன் ஆகியோர்களுடைய கதைகளைக் கூறினார். 'இந்தியப் பெண்களின் நிலை' என்ற தலைப்பிலும் 'இந்திய மத வாழ்க்கை' என்ற தலைப்பிலும் பெரியோர்களுக்குச் சொற்பொழிவுகள் ஆற்றினார். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் மகிமையையும் அவர்களுக்கு விளங்க வைத்தார். 'இந்தியாவின் புராதனக்கலைகள்' என்னும் பொருள் பற்றியும் அவர் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார்.

அமெரிக்காவிலே நிவேதிதாவுக்குக் கிடைத்த அனுபவங்கள் பல திறப்பட்டவைகளாக இருந்தன. சில மாதர்கள் அவருக்கு வேண்டிய உதவிகளை எல்லாம் செய்து தருவதில் ஊக்கம் கொண்டிருந்தார்கள். வேறு சிலர், அவரை மணிக்கணக்காகப் பேசச் செய்துவிட்டுப் பண உதவி ஒன்றுமே செய்யாமலும் இருந்தார்கள்.

தம்முடைய இந்தியப் பணிக்கு உதவி கிடைக்கும்போது நிவேதிதா பெரிதும் மகிழ்ச்சி கொள்ளுவதும், ஏமாற்றம் ஏற்பட்டபோது கவலை கொள்வதுமாக இருந்தார். அவருடைய உள்ளம் உணர்ச்சி வேகம் கொண்டதாக இருந்தது. தாம் எதிர்பார்த்த உதவி அமெரிக்காவிலே கிடைக்காமல் போய்விட்டால் என்ன செய்வது என்று அவர் சிலசமயங்களிலே ஏங்கி நிற்பார்.

சுவாமிஜி அவருக்கு அடிக்கடி கடிதம் எழுதிக் கர்மயோக நெறியை விளக்கிக் கூறுவார். சுவாமிஜியின் உபதேசம் நிவேதிதாவுக்கு எப்போதுமே புதிய ஊக்கத்தைத் தந்து, தாம் ஏற்ற பணியைச் சிறப்பாகச் செய்ய அவரைப் பெரிதும் தூண்டியது. சுவாமிஜி ஒரு தலை

சிறந்த கர்மயோகியாக உழைத்து வந்ததை நிவேதிதா பிரத்தியட்சமாகவே கண்டு வந்தார். எவ்வளவு துன்பங்கள் வந்தபோதும், அவைகளால் சுவாமிஜி தமது மனம் கலங்க விடாமல் கருமமே கண்ணுக நின்றது நிவேதிதாவுக்கு ஒரு தலைசிறந்த படிப்பினையாக அமைந்தது: 'இந்த சமயத்தில் என்னுடைய சூழ்நிலை மிகமிக இருள் அடைந்ததாகவே தோன்றுகிறது. ஆனால் நானே ஒரு போர்வீரன் ஆவேன். போர் புரிந்தபடியே மாண்டு போவேனே தவிர, இலட்சியத்தை விட்டுக் கொடுத்துப் பணிந்து விடமாட்டேன்' என்று சுவாமிஜி அன்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில் தமது கருத்தை உறுதியாகத் தெளிவுபடுத்தி இருந்தார்.

அமெரிக்க மக்கள் பலருக்கு இந்தியாவைப் பற்றிய பலவிதமான பொய் வதந்திகள் எட்டி வந்த காலம் அது: ஆகவே நிவேதிதா சொற்பொழிவுகள் நிகழ்த்திய பல கூட்டங்களில் இந்தியாவைப் பற்றிய பல விசித்திரமான கேள்விகளுக்கு அவர் விளக்கமாகப் பதில் தரவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

'இந்தியாவிலே கணவன்மாரும் மனைவியரும் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிடமாட்டார்களாமே! அவ்விதம் செய்யும்படி நீங்கள் அவர்களைத் தூண்டி அவர்களை நன்னெறிப் படுத்தக் கூடாதோ?' என்பது ஒரு அமெரிக்க மாது கேட்ட கேள்வி.

'குழந்தைகளை முதலைகளுக்கு இரையாகப் போட்டு விடுவார்களாமே இந்தியர்கள்!' என்பது மற்றொரு கேள்வி.

'பைத்தியக்கார விடுதி போன்ற இப்படிப்பட்ட ஒரு கூட்டத்தை நான் பார்த்ததே இல்லை' என்று நிவேதிதாவுக்குத் தோன்றியது. . சுவாமி விவேகானந்தரிடமிருந்து அவ்வப்போது வந்த கடிதங்கள் நிவேதிதாவுக்கு ஆறுதல் தந்து அவருடைய துன்பத்தைப் போக்கின. ஒரு கடிதத்தில் சுவாமிஜி பின்வருமாறு எழுதி இருந்தார்.

'உன்னுடைய பள்ளிக்கூடத்திற்குத் தேவையான பணஉதவி வந்து சேரும். அஞ்சவேண்டாம். அது வந்தே சேரவேண்டும். அப்படி அது வந்துசேரவில்லையென்றால்தான் யாருக்கு என்ன கவலை? ஒரு வழி இன்னொரு வழியைப் போலவே நல்லவழியே ஆகும். ஜகன்மாதா எல்லாம் அறிவாள். நீ உனக்கான பாடங்களைக் கற்று வருகின்றாய்; அவ்வளவே நான் வேண்டுவது. நானும் எனக்கான பாடங்களைக் கற்று வருகிறேன். எந்தக்கணத்தில் நாம் தகுதி பெறுகிறோமோ, அந்தக்கணத்தில் பண உதவியும் மனித உதவியும் நம்மை நோக்கிப் பாய்ந்து வந்தேயாக வேண்டும்.'

இந்தியப் பெண்களுக்கானக் கல்விப் பயிற்சித் திட்டம் ஒன்றைப் பற்றி விரிவான முறையில் நிவேதிதா அமெரிக்க அன்பர்களுக்கு எடுத்துச்சொல்லி பலருடைய ஒத்துழைப்பைப் பெற்றார். எந்த நல்ல முயற்சியும் ஆரம்பத்திலேயே முழு அளவு வெற்றி பெறுவது உலகத்தின் நடைமுறை ஆகாது அல்லவா? ஆகவே எதிர்ப்பும் கண்டனங்களும் நிவேதிதாவையும் வாட்டின. ஆனால் சுவாமி விவேகானந்தர் அவருக்குப் பெரும் துணையாக நின்று, அவரை ஊக்கம் குன்றாமல் பணியாற்றி வரும்படி செய்து வந்தார்.

'உனக்கு எல்லா ஆசிகளும் வந்து சேருவதாகுக! ஒரு சிறிதும் சோர்வடைந்துவிடாதே. நீயோ க்ஷத்திரிய ரத்தத்தில் பிறந்தவள். நாம் அணிந்திருக்கும் காவியுடையோ போர்க்களத்தில் ஏற்படும் வீர மரணத்தின் உடையாகும். நாம் மேற்கொண்டுள்ள திருப்பணிக்கு உயிர்ப் பலியாவதுதான் நமது லட்சியம் ஆகும். வெற்றி அடைவது அல்ல நம்முடைய லட்சியம். குழந்தாய், தளராமல் நில். பொன்னுக்கோ வேறு எதுவுக்குமோ விற்பனையாகி விடாதே. அவ்விதம் இலட்சியத்தில் உறுதியாக இருந்தால் வெற்றி பெறப்போவது நிச்சயம்' என்பவைகளைப் போன்ற அறிவுரைகளை தந்து சுவாமிஜி நிவேதிதாவின் சோர்வை நீக்கி வந்தார்.

'பாரதப் பெண்களின் இலட்சியங்கள்' என்னும் பொருள் பற்றி அமெரிக்காவிலே நிவேதிதா ஓர் அழகிய சொற்பொழிவு நிகழ்த்தினார். இந்தியப் பெண்களின் எளிமை பொருந்திய பரிசுத்தமான வாழ்க்கை, சத்சிந்தை ஆகியவைகளைப் பற்றி அமெரிக்க மக்கள் நன்கு புரிந்துகொள்வதற்கு அது வழியாக அமைந்தது.

இவ்விதம் அமெரிக்காவில் பல அரிய தொண்டுகளைச் செய்துவிட்டு 1900ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் நிவேதிதா பாரிஸ் நகரம் புறப்பட்டுச் சென்றார்.



# அவரவர் தர்மம்

மராட்டிய சிங்கம் வீர சிவாஜியைப் பற்றி நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். அவருடைய குருவின் பெயர் சாமர்த் ராமதாசர் என்பதாகும்.

சாமர்த் ராமதாசர் ஒரு துறவி. தம்முடைய குருவினிடம் மட்டுமில்லாமல், பொதுவாக எல்லாத் துறவிகளிடமும் வீர சிவாஜிக்கு அன்பும் மரியாதையும் உண்டு.

ஒருசமயம், சாமர்த் ராமதாசர் சீடர்கள் புடைசூழ சிவாஜியைப் பார்த்து வருவதற்காகக் கிளம்பினர். பல மணி நேரம் அவர்களுடைய பயணம் தொடர்ந்தது. நீண்டநேரம் நடந்ததாலும், வெய்யிலாலும், பசியாலும், சாதுக்கள் பயணத்தின் இடையிலேயே மிகவும் களைத்துச் சோர்ந்து விட்டார்கள். ஆகவே சாதுக்கள் கூட்டம் ஒரு மரத்தடியில் இளைப்பாறுவதற்காகத் தங்கியது.

பசியோடிருந்த சாதுக்களில் சிலர், அருகில் ஒரு தோட்டத்தில் கரும்புப் பயிர் நன்றாக ஓங்கி வளர்ந்திருந்ததைப் பார்த்தார்கள். கரும்பை ஒடித்துச் சாப்பிடும் எண்ணத்துடன், யாருடைய அனுமதியையும் பெறாமலேயே அவர்கள் அந்தத் தோட்டத்திற்குள் புகுந்துவிட்டார்கள்! பசிக்கு ஆறுதலாகக் கரும்பை ஒடித்துச் சாப்பிட்டார்கள். பிறகு சாமர்த் ராமதாசருக்கும் கரும்பை ஒடித்துக்கொண்டு வந்து கொடுத்தார்கள்.

சிறிது நேரத்திற்குள் சாதுக்கள் இருந்த இடத்திற்குத் தோட்டத்தின் சொந்தக்காரன் வந்து சேர்ந்தான். அவன் அந்தச் சாதுக்களை முன்பின் பார்த்தது கிடையாது. மகானாகிய சாமர்த் ராமதாசர், சிவாஜி மகாராஜாவின் குரு என்று அவன் கேள்விப்பட்டிருந்தான். ஆனால் ராமதாசரை அவன் நேரில் அதுவரையிலும் பார்த்தது இல்லை.

'இந்தச் சாதுக்கள் திருட்டுத்தனமாகத் தோட்டத்தில் புகுந்து கரும்பைத் திருடிச் சாப்பிட்டிருக்கிறார்கள்' என்று அறிந்தபோது, தோட்டக்காரனுக்குக் கோபம் கோபமாக வந்தது. ஆகவே அவன், அங்கிருந்த எல்லாச் சாதுக்களையுமே பலமாக அடிஅடி என்று அடித்து நொறுக்கினான்!

சாதுக்களில் ஒருவரும் ஒரு வார்த்தையும் பேசவில்லை. தோட்டக்காரன் கொடுத்த அவ்வளவு அடிகளையும் மௌனமாக இருந்து அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள். பிறகு அங்கிருந்து பயணப்பட்டு சிவாஜியின் அரண்மனையை அடைந்தார்கள்.

குருவையும் சாதுக்களையும் கண்டதுமே சூரியனைக் கண்ட தாமரையைப் போல சிவாஜி மன்னனின் உள்ளம் மகிழ்ச்சியால் பொங்கித் ததும்பியது. அவர்களை அன்பும் மரியாதையும் கொண்டு உபசாரங்களுடன் வரவேற்றார் அரசர்.

சாதுக்கள் வழியில் நேர்ந்த சம்பவத்தை ஒருவருக்கும் சொல்லவில்லை. ஆகவே மக்களுக்கோ, சிவாஜிக்கோ, அரண்மனை அதிகாரிகளுக்கோ நடந்த விஷயம் தெரிவதற்கு வாய்ப்பில்லாமல் போயிற்று.

சாதுக்கள் நீராடி வருவதற்காக சிவாஜி மன்னர் ஏற்பாடு செய்தார். தமது குருவாகிய ராமதாசரை நீராட்டும் பொறுப்பை அரசரே ஏற்றுக்கொண்டார். ராமதாசரை நீராட்டும்போது சிவாஜி, குருவினுடைய உடலைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தார். ராமதாசரின் உடல் முழுவதும் பலமாக தாக்கப்பட்டதற்கான அடையாளத் தழும்புகள் இருந்தன!

குருவிடம் அத்யந்த பக்தி பூண்டிருந்த சிவாஜி மன்னரின் உள்ளம், ராம தாசரின் உடலில் தென்பட்ட தழும்புகளைக் கண்டு, எப்படி எப்படி எல்லாம் துடி துடித்திருக்கும் என்பதை எழுத்தில் வடிக்கவே முடியாது. நாம் அதைக் கற்பனைக் கண்கொண்டுதான் ஓரளவிற்காவது புரிந்துகொள்ள முடியும். கன்னிப்போயிருந்த குருவின் உடலைக் கண்டு அனலிடைப் புழுவாகத் துடிதுடித்த சிவாஜி, அதற்கான காரணத்தைச் சொல்லும்படி ராமதாசரிடம் கேட்டார். இத்தகைய அடாத காரியம் செய்த கொடியவர்களை உடனடியாகச் சிறைபிடித்து வந்து தண்டிக்க வேண்டும் என்ற ஆவேசம் அவருக்கு எழுந்தது.

ஆனால் பலமுறை சிவாஜி மன்னன் கேட்டுக்கொண்டும், சீடரின் கேள்விக்குப் பதில் சொல்லாமலேயே ராமதாசர் பாராமுகமாகவே இருந்து விட்டார்.

ராமதாசர் அப்படியிருந்தாலும் சீடராகிய சிவாஜி அமைதியடைந்து சும்மா இருந்து விட முடியாதல்லவா? அரசர், மற்றைய சாதுக்கள் மூலம் நடந்த விபரத்தைத் தெரிந்துகொண்டு விட்டார். உடனே அரண்மனையிலிருந்த அதிகாரி கள் கரும்புத் தோட்டத்தை நோக்கிப் பாய்ந்தார்கள். தோட்டக்காரனை அரசரின் முன்பு இழுத்துக்கொண்டுவந்து நிறுத்தி விட்டார்கள். அப்போது தெய்வாதீன மாக சிவாஜியின் அருகில் ராமதாசரும் இருந்தார்.

தோட்டக்காரனைக் கண்டதும் ராமதாசர், 'இவரை இங்கே அழைத்து வந்திருப்பதற்கான காரணம் என்ன?' என்று கேட்டார்.

சிவாஜி மன்னர், 'சாதுக்களுக்குத் துன்பம் இழைத்த இவனுக்குப் பாடம் புகட்டும் வகையில் சரியான தண்டனை கொடுக்கப்பட வேண்டும்' என்று சொன்னார்.

ராமதாசர், "இவர் எந்தக் குற்றமும் செய்யவில்லையே. அவருக்குச் சொந்த மான கரும்புத் தோட்டத்தில், அவருடைய அனுமதியைப் பெருமலேயே சாதுக் கள் நுழைந்தது குற்றம். ஆகவே அவர் சாதுக்களைத் தண்டித்தது முற்றிலும் நியாயமானது.

"தவறு எங்களுடையதாக இருக்க, அவரைப்போய் நீங்கள் தண்டிக்க நினைப் பது நீதி ஆகாது. முதலாவதாக அவருடைய தோட்டத்திற்கு நாசம் ஏற்பட்டது. இரண்டாவதாக, இப்போது இவ்வளவுதூரம் வரவேண்டிய சிரமத்தையும் அவ ருக்கு நீங்கள் கொடுத்திருக்கிறீர்கள். மூன்ருவதாக, தனக்கு என்ன தண்டனை கிடைக்குமோ என்றும் அவர் பயந்து கொண்டிருக்கிருர். இவ்விதம் இவருக்கு நேர்ந்துள்ள எல்லாத் துன்பங்களுக்குமாகச் சேர்ந்து, ஐந்து கிராமங்களை இவ ருக்குப் பரிசாகக் கொடுக்க வேண்டும்" என்ருர்.

பிறகு என்ன? குருவின் பேச்சைத் தட்டக்கூடியவரா சிவாஜி? மரண தண்டனை கிடைக்கும் என்று எதிர்பார்த்து வந்த தோட்டக்காரன், ஐந்து கிரா மங்களைப் பரிசாகப் பெற்றுக்கொண்டு ஜாம் ஜாம் என்று வீடு போய்ச் சேர்ந் தான்.

ராமதாசர் மட்டுமல்ல, உண்மையான துறவிகள் அனைவருமே இத்தகைய கருணை உள்ளம் கொண்டவர்கள்தான். இந்த வரிசையில் பல மகான்களை நமது தாயகம் ஈன்றெடுத்திருக்கிறது. நாம் அவர்களுடைய பரம்பரையில் வந்தவர்கள் என்பதை ஒருபோதும் மறந்துவிடக் கூடாது.



# என்ன காரணம்?

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

தன்னுடைய பிள்ளையுடன் வேடிக்கையாகப் பேசும் உரிமை தாய்க்கு உண்டு. தகப்பனுரை விடத் தாயே நெருங்கிப் பேசும் உரிமையுடையவர். காரைக்கால் அம்மையார் சிவபெருமானிடம் அத்தகைய உறவோடு அன்பு செய்தவர். சிவபெருமானைத் தெய்வமாகவும் தகப்பனுகவும் பாராட்டிப் பாடும் பாடல்கள் பல. அவனிடம் நெருங்கி உரிமையோடு தாய் பேசுவது போலப் பேசும் இடங்களும் சில. ''நீ இது செய்யாதே; இப்படிச் செய்தால் ஆபத்து'' என்று சொல்வார். தாய் தன் மகனைப் பார்த்து ''அப்பா, நீ அங்கெல்லாம் போகாதே!''என்று சொல்வது போன்றது இது. ''இதனுல்தான் இப்படி இருக்கிருயோ?'' என்றும் கேட்பதுண்டு.

அவ்வாறு நெருங்கிப் பேசும் நிலையில் வருகிறது ஒரு பாட்டு.

சிவபெருமான் திருமுடியில் உள்ள பிறையைப் பார்க்கிருர் அம்மையார். அதை உற்று கவனிக்கிருர். பூர்ண சந்திரனைத் திருமுடியில் வைத்திருக்கக் கூடாதோ; ஒருகால் பூர்ண சந்திரனை வைத்துக்கொண்டு, பிறகு அதற்கு இந்த நிலை வந்ததோ? வேறு என்ன காரணம்? தெரியாதவரைப் போல யோசிக்கிருர். இறைவன் தன் திருமுடிமேல் பிறைச்சந்திரனைச் சூடியிருக்கும் காரணம் அவருக்குத் தெரியாதா?

தட்சனுடைய மாப்பிள்ளை சந்திரன். அவன் இருபத்தேழு நட்சத்திரங்களையும் மனைவியாகக் கொடுத்துத் திருமணம் செய்வித்தான். சந்திரனுக்கு உடுபதி என்று பெயர்; நட்சத்திரங்களுக்கு நாயகன் என்பது பொருள். சந்திரன் ரோகிணியிடம் அதிக அன்பு வைத்து மற்றவர்களைப் புறக்கணித்தான். அதையறிந்த மற்ற இருபத்தாறு நட்சத்திர மகளிரும் தட்சனிடம் முறையிட்டுக் கொண்டனர். தட்சனுக்குச் சந்திரன் மேல் கோபம் வந்துவிட்டது. அவன் தன் மாப்பிள்ளை என்பதையும் மறந்து, ''நீ தேய்ந்து ஒழிவாயாக!'' என்று சாபமிட்டான். அவன் தேய்ந்து வந்தான். அவன் சிவபெருமானிடம் வந்து பணிந்து இறைஞ்சினுன். அப்பெருமான் அவனைத் தன் திருமுடியின்மேல் பிறையாகவே வைத்துக்கொண்டான். வானத்தில் அவன் தேயவும் மீண்டும் வளரவும் வரம் அருளினுன்.

சிவபெருமான் திருமுடியில் வைத்துள்ள பிறை தேய்வதும் இல்லை; வளர்வதும் இல்லை. இறைவனை அடைந்தவர்கள் குறைவதும் வளர்வதும் இன்றி ஒரே நிலையில் இருப்பார்கள் என்பதை இது காட்டுகிறது.

பிறை வடிவிலே இருக்கும் சந்திரனைக் கண்டு அதுபற்றிச் சொல்ல வருகிருர் காரைக்கால் அம்மையார். 'இது இளைய குழந்தை போலப் பிறையாகவே இருக்கிறதே! இறைவனைச் சார்ந்த யாவும் வளம் பெற்று வளர்ச்சி அடையுமே! இந்தப் பிறை மாத்திரம் மறுபடியும் வளர்ந்து பெரிதாகி முழுமதியாகாதோ? என்ன காரணம்?''—இப்படி அவருடைய யோசனை, படர்கிறது.

**''இளங்குழவித் திங்கள் இது...**
**வளரமாட்டாதோ?''**

என்று தமக்குள்ளே வினுவை எழுப்பிக்கொள்கிருர். 'என்றும் குழவி போல இளமையை உடையதாய் உள்ள இதன் வளம் மறுபடியும் வளர்ச்சி பெருதோ?' என்றும் யோசிக்கிருர்.

இறைவன் தன் சடை முடியில் பாம்பை அணிந்திருக்கிருன். பாம்புக்கும் சந்திரனுக்கும் பகை. அது சந்திரனைக் கடித்து விழுங்கிவிடும். சிவபெருமான் முழுமதியாகவே தன் தலையில் அணிந்துகொண்டு, பிறகு அவன் திருமுடியில் இருக்கிற பாம்பு அதை உண்ண, அதனுல் அது நைந்து போய் சிறியதாகி விட்டதோ?

**நேர்ந்து அரவம் கொள்ளச் சிறுகிற்றே?**

'சே, சே! இறைவன் திருமுடிமேல் இருக்கும் சந்திரன் எவ்வளவு சிறந்த பதவியில் இருக்கிருன்! இறைவனைச் சார்ந்தவர்களுக்கும் பகைவர்களால் துன்பம் வருமா? காலனுல் உண்டாகும் பயத்தையே போக்கும் பெருமான், இந்தப் பாம்புப் பயத்தைப் போக்கமாட்டானு? அதுமட்டும் அன்று, இறைவனேடு தொடர்புடையவர்கள் அந்தத் தொடர்பு உண்டாவதற்குமுன்பு எப்படி இருந்தாலும், அவன்

தொடர்பு ஏற்பட்டபிறகு நல்லவர்கள் ஆகி விடுவார்களே! இரும்பு பொன்னுனற் போலக் கொடிய மனம் உடையவர்களெல்லாம் மிகவும் மென்மையான உள்ளம் படைத்தவர்கள் ஆகிவிடுவார்களே! அப்படி இருக்க, இறைவன் திருமுடியில் உள்ள பாம்பு தன்னுடன் அங்கே வாழும் சந்திரனுக்குத் தீங்கு புரியுமா? நல்ல அரசர்கள் ஆட்சிபுரிந்தால் இயற்கையாகப் பகைமை பாராட்டும் புலியும் பசுவும் ஒரு துறையில் நீர் உண்ணும் என்பார்களே! சிவபெருமானிடம் உள்ளவற்றினுாடே பகைமை உணர்ச்சி இருக்க நியாயம் இல்லையே! ஆகையால் இது பிறையாக இருப்பதற்கு வேறு ஏதாவது காரணம் இருக்க வேண்டும்?— இவ்வாறு ஓடுகிறது அவர் சிந்தனை.

'தாம் அணிந்து கொள்ளும் அணிகலன்களைத் தாமே ஆய்ந்தெடுத்துப் புனைந்து கொள்வது யாவருக்கும் இயல்பு. இறைவன் சந்திரனைத் தன் திருமுடியில் அணிந்துகொள்ள விரும்பினுன். முழுமதியாக அணிந்து கொண்டால், அது இடத்தை அடைத்துக்கொள்ளும். கங்கை, கொன்றை, எருக்கு, தும்பை, பாம்பு முதலிய வற்றிற்கும் இடம் இருக்கவேண்டும். ஆகையால் அந்தச் சந்திரனைச் சிறிதளவு வெட்டி வளைவாக அழகுபட வைத்துக்கொள்ளலாம் என்று இறைவன் நினைத்திருக்கிறுன். எந்த அளவில் வைத்துக்கொண்டால் பொருத்தமாக இருக்கும் என்று ஆராய்ந்து பதினுறு கலைகளையுடைய சந்திரனில் ஒரு கலையை மாத்திரம் அளவாக அரிந்து அதை வைத்துக்கொண்டானே?'—இப்படியும் ஓர் ஐயம் எழுகிறது.

இறைவனேடு நெருங்கி வேடிக்கையாக எழும் சிந்தனைகள் இவை. இப்போது இறைவனிடமே அம்மையார் தம் ஐயத்தை எழுப்பி வினவுகிறுர்.

'இறைவனே, நானும் பார்க்கிறேன், இளம் பிள்ளையைப் போல இருக்கிற இந்தச் சந்திரன், அன்று கண்ட மேனிக்கு அழிவு இல்லாமல் வளராமலே இருக்கிறதே! இது வளராதோ? ஒரு கால் பாம்பு விழுங்க அதனுல் சிறுத்துவிட்டதோ? அல்லது, நீயே அதை வேண்டும் அளவுக்கு அரிந்து தலையில் பொருத்திக் கொண்டாயோ! என்று கேட்கிறுர்.

**நேர்ந்து அரவம் கொள்ளச் சிறுகிற்றே? நீ அதனை**
**ஈர்ந்துஅளவே கொண்டுஇசைய வைத்தாயோ?—பேர்ந்து**
**வளம் குழவித் தாய்வளர மாட்டாதோ? என்னே?**
**இளங்குழவித் திங்கள் இது.**

[எம்பெருமானே, இளம் குழவித் திங்கள் இது—இளைய குழந்தை போன்ற சந்திரனுகிய இது, அரவம் கொள்ள—நீ அணிந்திருக்கும் பாம்பு பற்றிக்கொள்ள, நேர்ந்து—நைந்து, சிறுகிற்றே—சிறியதாயிற்றே? அன்றி நீ அதனை ஈர்ந்து—நீயே அதை அரிந்து, அளவேகொண்டு-உன்க்கு வேண்டும் அளவில் கொண்டு இசைய வைத்தாயோ—உன் திருமுடியில் பொருந்தும் படி வைத்தாயோ? குழவித்தாய்—இளமையை உடையதாய், வளம்—இதன் வளப்பம், பேர்ந்து—மறுபடியும், வளர மாட்டாதோ—வளராதோ? என்னே—என்ன காரணம்?

நேர்ந்து—சேர்ந்து, சந்தித்து என்றும் பொருள் கொள்ளலாம். அளவே—அளவாக; ஏ: அசைநிலை, பேர்ந்து வளர மாட்டாதோ என்று கூட்டுக. என்றே : ஓ, அசை நிலை. இது சிறுகிற்றே என்று கூட்டுக.]

இது காரைக்கால் அம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதியில் வரும் 42ஆம் பாட்டு.



மனிதர்கள் அற்ப விஷயங்களிலேயே இழுத்துச் செல்லப்படுகிறுர்கள். —நெப்போலியன்

குங்குமம் சுமந்த கழுதையைப் போல வாழ்வதும் ஒரு வாழ்வாகுமா? —வள்ளலார்

நாம் பக்தி சம்பந்தமான காரியங்களின் நடுவில் உறங்கிவிட்டால் சயித்தான் நம்மைத் தாலாட்டுவான். —பிஷப்ஹால்

சரியான அறிவு, சரியான நம்பிக்கை, சரியான நடத்தை ஆகியவைகள் ஒருவனை முக்திக்கு அழைத்துச் செல்கின்றன. —தத்வார்த்த சூத்திரம்



# வாழும் வழி

சுவாமி இராமகிருஷ்ணானந்தர்

நாம் அனைவரும், நம்மை இறுக்கிக் கட்டி வைத்துள்ள தளைகளாகிய பந்தங்களை நொறுங்கும்படி செய்ய வேண்டும்.

ஆனால் விரைவில் ஒரேயடியாக, ஒரு தாக்குதலிலேயே நொறுங்கிப் போகும் தளையை எப்போதாவது நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? நீங்கள் உங்களுடைய தளைகளை உடைத்தெறிய விரும்பினால், போதுமான அளவுக்குப் பொறுமையுடன் இருந்து ஒன்றன்பின் ஒன்றாகப் பல முறை அதைத் தாக்க வேண்டும்; தாக்கிக் கொண்டே இருக்கவேண்டும்.

திடீரென்று செய்யப்படும் காரியங்களால் எந்த ஒரு நன்மையும் உண்டாவதில்லை. மற்ற எல்லாவற்றையும்விட, துறவு மனப்பான்மை மட்டுமே உங்களிடம் மேலாகத் தலைதூக்கி நிற்கும்போது—மற்ற எல்லாவிதமான பந்தங்களும் சம்சாரமாகிய மரத்தோடு உங்களைச் சேர்த்துக் கட்டக்கூடிய வலிமையை மிகமிகக் குறைவாகப் பெற்றிருக்கும்போது—ஒரு பழம் நன்றாகக் கனிந்தவுடனேயே தானாகக் கீழே விழுவதைப் போல, நீங்களும் பகவானாகிய ஹரியின் மடியில் சென்று அமர்ந்து விடுவீர்கள்.

'சம்சார வாழ்க்கை என்பது, ஆசைகளைப் பெரிதும் தூண்டி மயக்கி விடக்கூடிய ஓர் இடம்'— என்று நீங்கள் சொல்கிறீர்கள்...ஆம், அது முற்றிலும் உண்மைதான். ஆனால், பலமாக அடிக்கும் புயல்காற்றுகள்தான் பலவீனமாக உள்ள ஒரு மரத்தின் வேர்களை உறுதிப்படுத்துகின்றன என்பது உங்களுக்குத் தெரியுமா? மயக்கிவிடக்கூடிய உலக ஆசைகளைச் சதாசர்வ காலமும் நீங்கள் எதிர்த்து நின்று போராடுவதால், தற்சமயம் உங்களிடம் ஆழ்ந்து பதியாமல் உள்ள நல்லொழுக்கங்கள்— நாளடைவில் உங்களிடம் உறுதிப்பட்டுவிடும் என்பது நிச்சயம். தொடர்ந்து உடற் பயிற்சிகளில் ஈடுபடுவதாலும் உழைப்பதாலும் ஒருவனுடைய உடல் உறுதி பெறுகிறது. தொடர்ந்து மேற்கொள்ளும் பழக்கம் என்னும் இதே விதி, நமது மனம் நல்ல ஆரோக்கியத்துடன் இருப்பதற்கும் பொருந்தும்.

நிலம் என்னவோ மிகவும் வழுக்கலாகத்தான் இருக்கிறது; ஆகவே அது தன்மீது நடந்து செல்பவனைத் தவறி விழாமல் நடக்க அனுமதிப்பதில்லை என்பதும் உண்மைதான்; ஆனால் ஒருவன் தனது முன்னேற்றப் பாதையில் உண்டாகும் எந்தவித தவறுகளையும் பொருட்படுத்தாமல், உறுதியான உள்ளத்துடன் தைரியமாக மேற்கொண்டு சென்றுகொண்டே இருந்தால், சேற்றை அவன் கடந்து சென்று விடுவது நிச்சயம்.

ஒருவன், இதுவரையிலும் யாரைத் தரிசிக்க வேண்டும் என்று கடுமையாக முயற்சி செய்து வந்தானோ, அந்த அன்பிற்குரிய தெய்வத்தைத் தரிசிப்பதற்கேற்ற வழுக்கல் இல்லாத நிலப் பகுதியை அடையும் வரையிலும், ஒருவன், விழுந்தும் எழுந்தும்—விழுந்த இடத்திலேயே சோர்ந்து நின்றுவிடாமல் மேல்நோக்கிச் சென்றுகொண்டே இருக்க வேண்டும்.

சில சந்தர்ப்பங்களில் நீங்கள் வழுக்கி விழ நேர்ந்தால், அதைப் பொருட்படுத்தாதீர்கள். வாழ்க்கையில் தவறுவது மனித இயல்பு. சோர்ந்து போகாதீர்கள். உறுதியுடன் மேல் நோக்கிச் சென்று கொண்டிருங்கள்.

சேறாகிய உலக வாழ்க்கையில் நடக்கும் போது, காலில் சேறு படாமலேயே நடக்க முடியும் என்று ஒருவரும் எதிர்பார்க்க முடியாது.

பாதையைக் கடக்க முயற்சி செய்தால், விழுந்து போய் விடுவோமே என்ற பயத்தினால் சேற்றின் மத்தியிலேயே உட்கார்ந்து கொள்வதும் முதல்தரமான முட்டாள்தனம் ஆகும்.

'முயற்சி செய், முயற்சி செய், திரும்பவும் முயற்சி செய்' என்னும் அறிவுரையாகிய பொன்மொழியை மறந்துவிடாதீர்கள். ஸ்காட்

லாந்தின் ப்ரூஸ்* (Bruce of Scotland) ஆறு முறை தோல்வி அடைந்தாலும் ஏழாவது முறை வெற்றி பெற்றதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

உங்களுக்கு என்னவெல்லாம் நடந்தாலும், அவைகள் எல்லாமே பகவான் ஸ்ரீகிருஷ்ணரிட மிருந்துதான் நேராக உங்களுக்கு வருகின்றன என்பதை உணர்ந்து திருப்தி அடையுங்கள்.

**பகவானிடம், ஓயாமல் தொடர்ந்து எப்போதும் பிரார்த்தித்துக் கொண்டிருப்பதை மறந்து விடாதீர்கள்**

உங்களுக்கு **உண்மையில்** நன்மையைத் தரக் கூடியவைகள் எல்லாவற்றையும், அவருடைய திருவருள் உங்களைப் பெறும்படி செய்யும்.

எப்போதும் அவருடைய பாதுகாப்பையே சார்ந்து நம்பி இருங்கள். அமைதியாகவும், பொறுமையாகவும் இருங்கள். அமைதி இல்லாமல் சஞ்சலப்பட்டுக் கொண்டிருப்பது ஒருவித நோயே ஆகும்.

பிறருக்கு உதவுவது, மனத் திருப்தியோடு இருப்பது, பரம்பொருளாகிய பகவானின் இச்சைக்கு உட்பட்டு அவரிடம் சரண் புகுந்து வாழ்வது—ஆகிய இவைகள்தான் மதவாழ்க்கை என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

---

* ஸ்காட்லாந்து என்பது சிறிய ஒரு நாடு. அந்த நாட்டை ராபர்ட் ப்ரூஸ் என்னும் அரசன் ஆட்சி செய்து வந்தான். எதிரிகள் அவனுடைய நாட்டின்மீது படை எடுத்தார்கள்.

போரில் தோற்று ஓடினுன் ப்ரூஸ். சிலகாலம் கழித்துப் படை திரட்டிக்கொண்டுவந்து தனது நாட்டைப் பிடிக்கப் போரிட்டான். மீண்டும் தோற்று ஓடினுன். தோல்வி! படுதோல்வி! மீண்டும் மீண்டும் ஆறுமுறை படை எடுத்தான். ஆறுமுறையும் தோற்று ஓடினுன்.

தோற்று ஓடிய ப்ரூஸ், மனம் உடைந்த நிலையில் ஒரு மலைக்குகையில் சென்று படுத்திருந்தான். அப்போது, அவனது தலைக்கு மேலே சிலந்தி ஒன்று வலை பின்னியது. வலை அறுந்து அறுந்து போயிற்று. பலமுறை அறுந்தது. சிலந்தியோ, விடாமுயற்சியுடன் வலையைப் பின்னிக் கொண்டே இருந்தது. தனது முயற்சியில் வெற்றியும் பெற்றது. இதைக்கண்டான் ப்ரூஸ். எழுச்சி பெற்று புதிய ஒரு உத்வேகத்துடன் எழுந்தான். மீண்டும் படை திரட்டினுன். தான் இழந்த அரசைக் கைப்பற்ற மீண்டும் ஏழாவது முறை படை எடுத்தான். வெற்றி! வெற்றி.



ஸ்ரீராமகிருஷ்ண மடம், சங்கம் ஆகியவற்றின் பொதுத் தலைவர் **ஸ்ரீமத் சுவாமி விரேஸ்வரானந்தஜி மகராஜ்** அவர்கள் தென்னுட்டிற்கு விஜயம் செய்கிறுர்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். அவர் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் செப்டம்பர் 14ஆம் தேதி முதல் 20ஆம் தேதி வரை தங்கியிருப்பார்.

**சுவாமிஜியின் சுற்றுப் பயண தேதியும் இடமும் வருமாறு:**

| | | |
|---|---|---|
| ஹைதராபாத் | ஆகஸ்டு | 24—31 வரை |
| பெங்களூர் | ,, | 31 |
| | செப்டம்பர் | 4—11 வரை |
| மைசூர் | ,, | 1— 4 வரை |
| சேலம் | ,, | 11—14 வரை |
| நாட்டறம்பள்ளி | ,, | 14 |
| சென்னை | ,, | 14—20 வரை |

# இல்லறமா? துறவறமா?

சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் சார்பாக 'வேதாந்தக் கதைகள்' என்னும் தமிழ் நூல் விரைவில் வெளிவர இருக்கிறது. அதில் இடம் பெற்றுள்ள ஒரு கதை இது.

ஓர் அரசனுடைய சபைக்குப் பல சன்னியாசிகள் வருவது வழக்கம். சபைக்கு வரும் எல்லா சன்னியாசிகளிடமும் அரசன், 'உலகத்தைத் துறந்து சன்னியாசியாக வாழ்வது நல்லதா? அல்லது உலகத்தோடு ஒட்ட ஒழுகி இல்லறத்தானுக வாழ்வது நல்லதா? எது சிறந்த வாழ்க்கை என்று சொல்லுங்கள்' என்று கேட்டு வந்தான்.

எவ்வளவோ துறவிகள் அரசனின் கேள்விக்குப் பதிலாக எதைஎதையோ சொன்னுர்கள். சில சன்னியாசிகள், 'துறவற வாழ்க்கைதான் மேலானது' என்று சொன்னுர்கள். அவ்விதம் சொன்னவர்களிடம், 'அது எப்படி? துறவற வாழ்க்கைதான் மேலானது என்ருல் விளக்கிக் காட்டுங்கள். இல்லாவிட்டால் நீங்களும் திருமணம் செய்துகொண்டு இல்லற வாழ்க்கையில் ஈடுபடுங்கள்' என்று கேட்டான் அரசன்.

'இல்லே, இல்லே. இல்லற வாழ்க்கைதான் சிறந்தது' என்று சிலர் பதில் சொல்லிவிட்டால், 'அது எப்படி? எதை வைத்து நீங்கள் இல்லற வாழ்க்கை சிறந்தது என்று சொல்கிறீர்கள்? அதற்கு என்ன ஆதாரம்? நீங்கள் சொன்னதை சரி என்று நிரூபித்துக் காட்டுங்கள்' என்று கேட்டு அரசன் தொந்தரவு செய்து வந்தான்.

இவ்விதம் பலகாலம் சென்றது. ஒருசமயம் அரசனின் அரண்மனைக்கு ஓர் இளம்துறவி வந்தார். அவரிடமும், 'இல்லற வாழ்க்கை சிறந்ததா? துறவற வாழ்க்கை சிறந்ததா?' என்று வழக்கமாக தான் கேட்கும் கேள்வியைக் கேட்டான் அரசன்.

'இரண்டுமே சிறந்ததுதான். அவரவர் தர்மத்திற்கு ஏற்ப இரண்டு வாழ்க்கையுமே சிறந்தது' என்று பதில் சொன்னுர் இளம்துறவி.

அரசன் அப்போதும் திருப்தி அடையவில்லே. 'அது எப்படி? நிரூபியுங்கள் பார்க்கலாம்' என்று வழக்கம் போலவே அவரிடமும் கேட்டான்.

'சரி. நிரூபித்துக் காட்டுகிறேன். ஆனுல், அரசே, நீங்கள் என்கூடவே சிலநாட்கள் இருக்க வேண்டும். என்னுடனேயே நான் போகும் இடங்களுக்கு எல்லாம் வர வேண்டும். அப்போதுதான் நான் சொல்வதன் உண்மை உங்களுக்குப் புரியும்' என்ற ஒரு நிபந்தனையைச் சன்னியாசி விதித்தார்.

அரசன் அந்த நிபந்தனைக்கு ஒப்புக்கொண்டான்.

சன்னியாசியும் அரசனுமாகப் பல ஊர்களேயும் பல நாடுகளேயும் கடந்து சென்ருர்கள். நீண்ட தூரம் பிரயாணம் செய்த பிறகு, ஒரு புதிய நாட்டின் தலேநகருக்கு வந்து சேர்ந்தார்கள்.

அங்கே அப்போது ஒரு பெரிய விசேஷம் நடந்து கொண்டிருந்தது. அதன் காரணமாக, இசையும் மேளமும் முழங்கியபடி நகரமே, விழாக்கோலம் பூண்டிருந்தது. அரசனும் சன்னியாசியும், 'இங்கே என்ன விசேஷம்?' என்று விசாரித்தபோது, அந்த ஊர் ராஜகுமாரிக்குச் சுயம்வரம் என்பது தெரிய வந்தது.

ஊரின் நடுவிலிருந்த முக்கியமான ஓர் இடத்தில் பல தேசத்து அரசகுமாரர்களும் கூடியிருந்தார்கள். இந்த ராஜகுமாரன் இப்படிப்பட்டவன் என்று ஒவ்வொரு அரசகுமாரனுக்கும் கட்டியம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அப்போது அந்த தேசத்து ராஜகுமாரி ஒரு பல்லக்கிலே வந்தாள். ஒவ்வொரு ராஜகுமாரனுக்கும் முன்பும் பல்லக்கு நிறுத்தப்பட்டது. அந்த ராஜகுமாரன் யார், எப்படிப்பட்டவன், அவனிடம் விசேஷமாக என்ன என்ன தகுதிகள் இருக்கின்றன என்பவைகளே எல்லாம் ஒருவர் விளக்கமாக எடுத்துச் சொல்வார். ராஜகுமாரி, 'உம், அடுத்து' என்பாள். பல்லக்கு நகர்ந்து அடுத்த ராஜகுமாரனிடம் போய் நிற்கும். அவனேப் பற்றிய விவரங்களேச் சொல்வார்கள். பிறகு அரசிளங்குமரி, 'உம், அடுத்து' என்று சொல்வாள்.

இவ்விதம் அங்கே கூடியிருந்த எல்லா இளவரசர்களேப் பற்றித் தெரிந்து கொண்டும், ஒருவரையும் அவள் மனம் நாடவில்லே.

அவளோ மிகவும் அழகாக இருந்தாள். அவளே அடைய மாட்டோமா என்று அங்கே

குழுமியிருந்த அத்தனை ராஜகுமாரர்களும் ஆவலோடு காத்துக்கொண்டிருந்தார்கள்.

'இங்கே இவ்வளவு அரசகுமாரர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஒருவர் கூட எனது உள்ளத்திற்கு இனியவராக இல்லையே' என்று நினைத்து ராஜகுமாரி வருந்தினாள். அவ்விதம் வருத்தப்பட்டுக்கொண்டே அவள் திரும்பியபோது வழியிலே ஒருவரை அவள் கண்டாள்.

அந்த ஊருக்குப் புதிதாக ஒரு பாலசன்னியாசி வந்திருந்தார். அவர், அங்கே ஏராளமாகக் கூட்டம் கூடியிருப்பதைப் பார்த்துவிட்டு, 'ஊரிலே என்ன விசேஷம்?' என்று அருகில் இருந்தவர்களிடம் விசாரித்தார்.

அந்த இளம் துறவியின் முகத்தில் அறிவும் அழகும் சுடர்விட்டுப் பிரகாசித்தன. அரசகுமாரிக்கு அவரைப் பார்த்ததுமே பிடித்துவிட்டது. 'இவர்தான் நான் விரும்பும் கணவர்' என்று சொல்லிக்கொண்டே, அவள் திடீரென்று பாலசன்னியாசியின் அருகே சென்று, தனது கையிலிருந்த சுயம்வர மாலையை அவருடைய கழுத்தில் போட்டுவிட்டாள்!

இளந்துறவி இதைச் சற்றும் எதிர்பார்க்கவே இல்லை. அவர் அப்படியே பதறிப்போய் மாலையைத் தூக்கி வீசி எறிந்தார். 'இது என்ன பைத்தியக்காரத்தனம்? நானோ ஒரு சன்னியாசி. எனக்காவது, கல்யாணமாவது?' என்று சொல்லிக் கத்தினார்.

ராஜகுமாரியின் தந்தை, அதாவது அந்த நாட்டின் அரசன், 'இந்த பாலசன்னியாசி மிகவும் ஏழை போல இருக்கிறது. அதனால்தான் ராஜகுமாரியைத் திருமணம் செய்வதற்கு இவர் தயங்குகிறார். இதற்கு நாம் ஒரு வழியைச் செய்துவிடலாம்' என்று நினைத்தான்.

ஆகவே, அவன் இளம் துறவியைப் பார்த்து, 'அப்பா, பேரழகியாகிய இந்த ராஜகுமாரியை நீ திருமணம் செய்துகொள். உடனே நான் என்னுடைய ராஜ்ஜியத்தில் பாதியை உனக்குத் தந்துவிடுகிறேன். எனது காலத்திற்குப் பிறகு, முழு ராஜ்ஜியமும் உனக்கே கிடைக்கும்' என்று சொன்னான்.

இப்படிச் சொல்லிவிட்டு, மன்னன் மலர் மாலையை எடுத்து மறுபடியும் பாலசன்னியாசியின் கழுத்திலே இட்டான்.

திரும்பவும் சன்னியாசி வெகுவேகமாக மாலையை உதறி எறிந்தார். 'எனக்குக் கல்யாணம் வேண்டவே வேண்டாம்' என்று சொல்லிவிட்டு, அந்த இடத்திலிருந்தே விடுவிடுவென்று விரைவாகக் கிளம்பி நடந்தார்.

ராஜகுமாரிக்கோ மிகவும் ஏமாற்றமாகிவிட்டது. 'நான் அவரையே விரும்புகிறேன். கல்யாணம் என்றால், அவரைத்தான் நான் கல்யாணம் செய்துகொள்வேன்' என்று சொல்லி, அவளும் அந்த இளம் துறவியைப் பின்தொடர்ந்து விடுவிடுவென்று நடந்தாள்!

இவைகளை எல்லாம் சந்தேகம் கேட்ட அரசனும், அவனுக்கு விளக்கம் தர ஒப்புக்கொண்ட சன்னியாசியும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சன்னியாசி, அரசனிடம், 'நாம் இவர்களைப் பின் தொடர்ந்து செல்லலாம்' என்று சொன்னார். பாலசன்னியாசிக்கும் ராஜகுமாரிக்கும் தெரியாமல் சற்று தூரத்தில் அரசனும் இந்தத் துறவியும் நடந்தார்கள்.

'ராஜகுமாரியை மணக்க முடியாது' என்று சொல்லி விர்ரென்று வெளியேறிய பாலசன்னியாசி, வேகவேகமாக நகரத்தை விட்டே வெளியேறி நீண்டதூரம் நடந்தார். அடர்ந்த ஒரு காட்டிற்குள்ளே சென்றுவிட்டார். பிறகு அவர் எங்கே போனார், எப்படிப் போனார் என்பதை ஒருவராலுமே கண்டுபிடிக்கவே முடியவில்லை.

அதுவரையிலும் பாலசன்னியாசியைத் தொடர்ந்து நடந்து வந்த ராஜகுமாரிக்கு, மேற்கொண்டு அவரைத் தொடர முடியவில்லை. என்ன செய்வது என்று தெரியாமல் அவள் திகைத்தாள். காட்டிலே ஒரு மரத்தின் அடியில் நின்றுகொண்டு அழத் தொடங்கிவிட்டாள். அரண்மனைக்குத் திரும்பலாம் என்றால், அதற்குக்கூட அவளுக்கு வழி தெரியவில்லை.

அந்த சமயத்தில் நமது அரசனும் சன்னியாசியும் அங்கே வந்தார்கள். அவளுக்கு ஆறுதல் வார்த்தைகளைச் சொல்லித் தேற்றினார்கள். அரண்மனைக்கு வழி காட்டுவதாகச் சொன்னார்கள்.

ஆனால் அப்போது பொழுதுசாய்ந்து இருட்டிவிட்டது. 'இதுவே பெரிய மரமாகத்தான் இருக்கிறது. இங்கேயே இரவுப் பொழுதைக் கழித்துவிட்டு, காலையில் வழி கண்டுபிடித்து ஊருக்குத் திரும்பலாம்' என்று முடிவு செய்தார்கள்.

அந்த மரத்திலே ஒரு ஆண் பறவையும், ஒரு பெண் பறவையும் கூடுகட்டி வாழ்ந்து வந்தன. அவைகளுக்கு மூன்று பறவைக் குஞ்சுகள் இருந்தன. ஆண்பறவை தன் மனைவியைப் பார்த்து, 'பெண்ணே, நம்மைத் தேடி மூன்று விருந்

தினர்கள் வந்திருக்கிறார்கள். இப்போது நாம் என்ன செய்வது? இதுவோ குளிர்காலம். நம்மிடம் குளிர்காயக்கூட ஒன்றும் இல்லையே?' என்று வருத்தத்துடன் சொல்லியது.

இப்படிச் சொல்லிவிட்டு, உடனே ஆண் பறவை பறந்து சென்றது. தனது சின்னஞ்சிறிய அலகினால் இங்கும் அங்கும் கிடந்த சுள்ளிகளைப் பொறுக்கிக் கொண்டு வந்து ஒரு பெரிய குவியலாகக் குவித்தது. பிறகு எங்கிருந்தோ எரியும் தணல் ஒன்றைக் கொண்டு வந்தும் போட்டது. மரத்தின் கீழே உட்கார்ந்திருந்த மூன்று பேரும் அவைகளைக்கொண்டு தீ மூட்டிக் குளிர் காயத் தொடங்கினார்கள்.

அவ்வளவு செய்த பிறகும் அந்தச் சிறிய ஆண் பறவையின் மனம் திருப்தி அடையவில்லை. ஆகவே அது தன்னுடைய மனைவியைப் பார்த்து, 'பெண்ணே, இந்த விருந்தாளிகளுக்கு உணவாக அளிக்க நம்மிடம் ஒன்றுமேயில்லையே! அவர்களோ மிகவும் பசியாக இருக்கிறார்கள். நாமோ இல்லறத்தார்கள். நம்மிடம் வருபவர்களுக்கு ஏதாவது கொடுத்து உபசரிப்பது நமது கடமை. இப்போது நாம் என்ன செய்வது? என்னதான் செய்ய முடியும்? சரி, என்னையே நான் அவர்களுக்குக் கொடுத்து விடுகிறேன்' என்று சொல்லி, விர்ரென்று பறந்து எரியும் நெருப்பிலே விழுந்து பொசுங்கியது!

மரத்தடியில் இருந்த மூவரும் பறவையின் செயலைப் பார்த்தார்கள். ஆனால், அவர்கள் ஓடிவந்து தடுப்பதற்கும் முன்னாலேயே பறவை சட்டென்று நெருப்பில் விழுந்துவிட்டது!

சிறுபறவையின் பெண்பறவை தனது கணவன் செய்ததைப் பார்த்தது. 'இங்கே இருப்பதோ மூன்று பேர்கள். அவர்களின் பசிக்கு ஒரேஒரு பறவையின் இறைச்சி எப்படிப் போதும்? அது போதாது. என் கணவர் ஈடுபட்ட முயற்சிக்கு நானும் உதவாவிட்டால், நான் என்ன மனைவி? அவர்கள் எனது உடலையும் சேர்த்துச் சாப்பிடட்டும்' என்று சொல்லி, அதுவும் விர்ரென்று எரியும் நெருப்பில் விழுந்து உயிரை விட்டது.

மரத்திலே கூட்டில் இருந்த மூன்று பறவைக் குஞ்சுகளும், தங்கள் பெற்றோர்களின் செயல்களைப் பார்த்து, ''அப்பாவும் அம்மாவும் தங்கள் கடமையைச் செய்திருக்கிறார்கள். இருந்தாலும் விருந்தாளிகளுக்கு அது போதாது. பெற்றோர் ஈடுபட்ட முயற்சியில் உதவுவது குழந்தைகளாகிய நம்முடைய கடமை அல்லவா? உத்தமக் குழந்தைகளின் இலட்சணமே அதுதானே. ஆகவே நாமும் விருந்தாளிகளுக்கு உதவுவோம்' என்று சொல்லி மூன்றுமாகச் சேர்ந்து நெருப்பிலே விழுந்து விட்டன.

மரத்தின் கீழே இருந்த மூவரும் இந்தக் காட்சிகளைக் கண்டு பிரமித்தார்கள். அவர்களுக்கு, அந்த உத்தமப் பறவைகளை எடுத்துச் சாப்பிட மனம் வரவில்லை. இரவு முழுவதும் அந்தப் பறவைகளின் பெருமையைப் பற்றியே அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள்.

பொழுது விடிந்தது. சன்னியாசியும் அரசனும், அரசகுமாரிக்கு அவள்து ஊருக்குப் போகும் வழியைக் காட்டினார்கள். அவள் தனது தந்தையின் அரண்மனைக்குத் திரும்பினாள்.

சன்னியாசி அரசனை நோக்கித் திரும்பினார்: ''அரசே! இல்லறம் சிறந்ததா, துறவறம் சிறந்ததா? என்பதற்கான பதிலை இப்போது தாங்கள் புரிந்து கொண்டீர்களா? உலகத்தோடு ஒட்டி இல்லற வாழ்க்கை வாழ வேண்டுமானால் இந்தப் பறவைகளைப் போலவே வாழ வேண்டும். எந்த நிமிஷமும் ஏதாவது நோக்கத்திற்காகத் தியாகம் செய்யத் தயாராக இருக்க வேண்டும்.

''துறவியாக இருக்க வேண்டும் என்றால், அந்த பாலசன்னியாசியைப் போலவே வாழ வேண்டும். ஓர் அழகிய ராஜகுமாரியோ, பாதி அரசுரிமையோ அவருடைய மனதைக் கலக்கவே இல்லை. அப்படிப்பட்ட உறுதியான மனம் கொண்டிருக்க வேண்டும்.

''இல்லறத்தானாக வாழ்ந்தால், மற்றவர்களுடைய நலனுக்காகவே வாழ்ந்து தியாகங்கள் செய்யச் சித்தமாக இருக்க வேண்டும். துறவியாக வாழ்ந்தால், பொன்னையும் பொருளையும் அழகையும் அதிகாரத்தையும் பெரிதாக மதிக்காத மனப்பக்குவம் பெற வேண்டும். இல்லற வாழ்க்கையும் சிறந்தது. துறவற வாழ்க்கையும் சிறந்தது. ஆனால் அவரவர்களுடைய தர்மத்தை அவரவர்கள் கடைப்பிடித்து வாழ வேண்டும். அதுதான் சரியானது' என்ற ஒரு சிறந்த விளக்கத்தை அந்தப் பெரிய உள்ளம் கொண்ட சன்னியாசி அரசனுக்குக் கொடுத்தார்.

சுவாமி விவேகானந்தர் தமது 'கர்மயோகம்' என்னும் அரிய நூலில் நாம் மேலே பார்த்த இந்தக் கதையைக் கூறியிருக்கிறார்.



# ஸ்ரீ கிருஷ்ணர் போதித்த கர்மயோகம்

சுவாமி விவேகானந்தர்

எனக்குத் தெரிந்த வரையில் ஸ்ரீகிருஷ்ணரே எல்லாவிதங்களிலும் மிகவும் பக்குவப்பட்டு விளங்கியவர் ஆவார். அவர் ஆச்சரியப்படத் தக்க வகையிலே மூளை அறிவிலும், இதய உணர்ச்சியிலும், செயலாற்றுவதிலும் சரிசமமாகப் பூத்துக் கனிந்திருந்தார். அவருடைய வாழ்க்கையில் ஒவ்வொரு கணமும் செயலாற்றல் மிகுந்து உயிர் ததும்பி நிற்கிறது. சிறந்த பண்புகளைக் கொண்ட மனிதனுகவோ, போர் வீரராகவோ, அமைச்சராகவோ, வேறு யாராகவோ அவர் ஒவ்வொரு கணமும் செயல்புரிந்தபடி இருக்கிருர். அவர் மகத்தான சான்றோராளுலும், பண்டிதராளுலும், கவிஞராளுலும் மகிமை மிகுந்தவராகவே இருக்கிருர்.



இவ்விதம் எல்லாக் கோணங்களிலும் முழுமை பெற்று, ஆச்சரியப்படத்தக்க செயல் திறமையும், மூளை அறிவுடன் இதய உணர்ச்சி கலந்திருப்பதையும் கீதையிலும் வேறு நூல்களிலும் பார்க்கலாம். ஆம், ஆச்சரியமான இதய உணர்ச்சியும் நயமான அழகிய நடையும் கீதையிலே அமைந்திருப்பதைப் போல வேறு எங்குமே சிறிது குறைந்த அளவிலும் கூட அமையவில்லை.

ஸ்ரீகிருஷ்ணருடைய பிரமாதமான செயலாற்றல் இன்னமும்கூட நமக்குத் தெளிவாக விளங்கி வருகிறது. ஸ்ரீகிருஷ்ணர் வாழ்ந்து மறைந்து ஐயாயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன. அவரிடம் இருந்து கோடிக்கணக்கான மக்கள் அருள் ஊக்கம் பெற்று உய்வடைந்திருக்கிருர்கள். இந்த விஷயம் நமக்குத் தெரிந்தோ தெரியாமலோ இருக்கலாம். ஆனுல் ஸ்ரீகிருஷ்ணர் எந்த அளவுக்கு உலக மக்கள் அனைவரையும் உயர் நெறியிலே இயக்கி வந்திருக்கிருர் என்பதைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள். அவரிடம் பரிபூரணமாக ஞானம் ஜ்வலித்தது. அதற்காகவே நான் அவரை மதித்துப் போற்றுகிறேன்.

ஸ்ரீகிருஷ்ணருடைய மூளையிலே சிக்கல் கிடையாது, பின்னல் கிடையாது, குழப்பம் கிடையாது; மூட நம்பிக்கை எதுவுமே கிடையாது.

பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு பொருளின் உபயோகமும் அவருக்குத் தெரிந்திருந்தது. ஒவ்வொரு பொருளுக்கும் உரிய இடத்தை அததற்கு அளிக்க வேண்டிய அவசியம் வரும்போது, அவர் அந்த ஸ்தலத்திற்கு வந்து காரியத்தை முடிக்கிருர்.

ஸ்ரீகிருஷ்ணர் செய்து சாதித்த பெரிய காரியம் என்ன என்று சொல்கிறேன். மனிதகுலம் மேலும் மேலும் முன்னேறியபடி போய்க் கொண்டே இருக்கிறது. இவ்விதம் மேலும் முன்னேறிச் சென்று வரும் மனித இனத்தை விரிந்த திருஷ்டிகொண்டு நாம் பார்க்க வேண்டும். அதைச் செய்வதற்கு நம்முடைய கண்களைத் துடைத்துக் களங்கத்தை நீக்க வேண்டும்—இதையே கிருஷ்ணர் ஸ்ரீசெய்தார். எங்கும் எல்லாவற்றிலும் உண்மையைக் காணும் வல்லமை, பரந்த உள்ளத்திற்குத்தான் உண்டு. இத்தகைய பரந்த இதயத்தை முதல்முதலாகப் பெற்றிருந்தவர் ஸ்ரீகிருஷ்ணரே ஆவார். அனைவருக்கும், ஒவ்வொருவருக்கும் — பயன்படும் அழகிய கருத்துக்களை முதல்முதலாகச் சொன்னவர் ஸ்ரீ கிருஷ்ணரே ஆவார்.

ஸ்ரீ கிருஷ்ணருடைய போதனையிலே இரண்டு கருத்துக்கள் தலைதூக்கி நிற்கின்றன. முதலாவது பல்வேறு அபிப்பிராயங்களுக்கிடையிலே நிலவும் சமரசம். இரண்டாவது பற்றின்மை.

சமய வளர்ச்சியின் வரலாற்றிலே மிகப் பெரிய கட்டம், மிக முக்கியமான கட்டம் என்று சொல்லத்தக்கது இதுதான். அன்புக்காகவே அன்பு செய்வது, கர்மத்திற்காகவே கர்மம் செயவது, கடமைக்காகவே கடமையை ஆற்றுவது—என்ற இலட்சியம் கோஷிக்கப்பட்டதுதான் அந்த கட்டம். இந்த இலட்சியம், அவதார புருஷர்களுள் மிகவும் பெருமை வாய்ந்தவராகிய ஸ்ரீ கிருஷ்ணருடைய வாக்கில் இருந்துதான் முதன்முதலாக வெளிவந்தது. மேலும் இந்த இலட்சியம் மனித குலத்தின் வரலாற்றிலேயே முதல்முறையாக இந்திய மண்ணில்தான் சொல்லப்பட்டது.

அச்சத்தை அடிப்படையாகக் கொண்ட சமய போதனையும் சொர்க்க லோக இன்பங்களைக் காட்டி மக்களை ஈர்க்கும் சமய போதனையும் மறைந்தே போயின. மீண்டும் தலையெடுக்காமலேயே மறைந்து போய்விட்டன.

நரகத்தை நினைத்துப் பயப்படுவதும், சுவர்க்கப் பூமியிலே இன்பம் கிடைக்கும் என்ற ஆசையின் தூண்டுதலும், இன்னமும் ஒருபுறம் இருந்தாலும், மிகப்பெரிய இலட்சியம் ஒன்று முன்வர ஆரம்பித்தது. அன்புக்காக மட்டும் அன்பு காட்டுவது, கடமைக்காக மட்டும் கடமை செய்வது, கர்மத்திற்காக மட்டும் கர்மம் புரிவது—என்பவைகள் அந்த மகத்தான இலட்சியங்கள் ஆயின.

ஒவ்வொரு மனிதனும் உலகிலே பணிபுரியத்தான் வேண்டும். ஆத்மாவிடம் பரிபூரணமாக திருப்தி அடைந்து இருப்பவர் யாரோ, ஆத்மாவுக்குப் புறம்பாக எதைப் பற்றியும் ஆசை இல்லாமல் இருப்பவர் யரோ, ஆத்மாவில் இருந்தும் மனம் ஒருபோதும் சலித்துப் பிறழாமல் இருப்பவர் யாரோ, ஆத்மாவே எல்லாமும் என்று இருப்பவர் யாரோ—அவர் மட்டுமே பணி புரிவதில்லை. மற்றவர் அனைவரும் கர்மம் செய்தே ஆகவேண்டும்.

ஒருவன் தத்துவ தரிசனம் ஒன்றையும் படிக்காதவனாக இருக்கலாம். எந்தத் தெய்வத்திடமும் நம்பிக்கை இல்லாதவனாக இருக்கலாம். என்றைக்குமே தெய்வ நம்பிக்கை இல்லாதவனாக இருக்கலாம். வாழ்க்கையில் ஒரு தடவை கூடப் பிரார்த்தனை செய்யாதவனாக இருக்கலாம். ஆனால் நல்ல் கர்மங்களின் சக்தி ஒன்றே அவனைத் தூண்டி, தன்னுடைய உயிரையும் மற்ற எல்லாவற்றையும் மற்றவர்களுக்காகத் தியாகம் செய்துவிடத் தயாராக இருக்கும் நிலைக்கு அவனை உயர்த்திவிடுமானால், அவன் அடையும் நிலை—மத வாழ்க்கையில் ஈடுபாடு கொண்ட ஒரு மனிதன் தனது பிரார்த்தனையின் மூலமும், தத்துவஞானி தன்னுடைய ஞானத்தின் மூலமும் அடைகிற நிலையே ஆகும்.

ஆகவே தத்துவஞானி, கர்மயோகி, பக்தன் ஆகிய இம்மூவரும் ஒரே நிலையில், ஒரே புள்ளியில் ஒன்றுகூடிச் சந்திக்கிறார்கள் என்பதை நீ பார்க்கலாம். அந்தப் புள்ளியானது சுயநலம் இல்லாத நிலை, ஆத்மத் தியாகம் என்ற இடமாகும்.

மக்களுக்கிடையே நிலவி வரும் தத்துவ தரிசனங்களும், சமய சம்பிரதாயங்களும் எவ்வளவுதான் வேறுபட்டிருந்தாலும், தன்னை மற்றவர்களுக்காகத் தியாகம் செய்ய முன்வரும் தயாளனை உலகம் முழுவதுமே மதித்துப் பாராட்டுகிறது. அவனுடைய தியாகத்தைப் பார்த்துப் பிரமித்து வியக்கிறது.

கர்மயோகம் சொல்வது இதுதான்: ஒருவன் செய்த வினை, அது தனக்குரிய பலனைத் தரும் வரையிலும் அழிந்து போவதே கிடையாது. இயற்கையிலுள்ள எந்த சக்தியாலும், அந்த

வினை தனக்குரிய பலனைத் தருவதிலிருந்தும் தடுத்து நிறுத்த முடியாது. நான் தீய செயல் ஒன்றைச் செய்தால், அதற்காகத் துன்பப்பட்டுத்தான் ஆகவேண்டும். அவ்விதம் துன்பப் படுவதைத் தடுப்பதற்கோ அல்லது அதை நிறுத்தி வைப்பதற்கோ வலிமை வாய்ந்த சக்தி எதுவுமே இந்தப் பிரபஞ்சத்தில் இல்லவே இல்லை.

அதுபோலவே, நான் நல்ல கர்மம் ஒன்றைச் செய்தால், அதற்குரிய நல்லபயன் விளைவதைத் தடுக்கக்கூடிய சக்தியும் பிரபஞ்சத்தில் கிடையாது. காரணத்திற்கு உரிய காரியம் விளைந்தே ஆகவேண்டும்; எதுவும் அதைத்தடை செய்ய முடியாது. தடுத்து வைக்க முடியாது.

நமது மனம், நிகழ்ச்சிகளின் வரிசை ஒன்றைக் கிரகித்துக்கொள்ளும் முறையை வியவகார விதி என்று சொல்கிறோம். அது எல்லாம் உள்ளத்திலேயே இருக்கின்றன.

சில நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அவைகள் ஒன்றன்பின் ஒன்றாகவோ அல்லது கூட்டாக இணைந்தோ நிகழ்கின்றன. பிறகு இந்த நிகழ்ச்சி மீண்டும் மீண்டும் ஒழுங்காக நடந்து கொண்டே இருக்கும் என்ற நம்பிக்கை நமக்கு ஏற்படுகிறது. இவ்விதம் அந்த முழு நிகழ்ச்சி வரிசையினுடைய முறையையும் கிரகித்துக் கொள்வது நமது மனதிற்குச் சாத்தியமாகிறது. இதை எல்லாம்தான் நாம் வியவகார விதி என்று குறிப்பிடுகிறோம்.

மிக ஆழ்ந்த மௌனம், ஏகாந்தம் ஆகியவைகளுக்கிடையில் மிகத் தீவிரமான செயலை யார் பார்க்கிறானோ, மிகத் தீவிரமான செயலுக்கிடையில் பாலைவனத்தில் நிலவும் மௌனத்தையும் தனிமையையும் யார் பார்க்கிறானோ அவனே இலட்சிய புருஷன் ஆவான்.

அவன் மன அடக்கத்தின் இரகசியத்தைக் கண்டவன். தன்னடக்கம் சித்திக்கப்பெற்றவன். பெரிய ஒரு நகரத்தின் வீதியிலே அந்த இலட்சிய புருஷன் சென்று கொண்டிருக்கலாம். அங்கே போக்குவரத்து நடமாட்டம் மிகுந்து இருக்கலாம். ஆனால் அவனுடைய மனம்,குகையிலே வாழ்பவனுடைய மனம் போலவே அமைதியாக இருக்கும். எந்தவித ஓசையுமே குகையில் வாழ்பவனுடைய காதில் விழாதல்லவா? ஆனாலும் அப்போதெல்லாமும் அந்த இலட்சிய புருஷன் வெகு மும்முரமாகக் கர்மம் செய்த படியே இருப்பான். இதுதான் கர்ம யோகத்தின் இலட்சியமாகும். அந்த நிலையை நாம் அடைந்துவிட்டால், உண்மையில் கர்மத்தின் இரகசியத்தை அறிந்தவர்கள் ஆவோம்.

கர்ம யோகம் என்றால் என்ன என்பதை இப்போது தெரிந்து கொள்ளலாம். மரணத் தறுவாயிலும் கூட வேற்றான் ஒருவனுக்கு உதவி செய்வதே—கேள்வி ஒன்றையும் கேட்காமலேயே உதவி செய்வதே—கர்ம யோகம். கோடிக்கணக்கான தடவைகள் நீ ஏமாற்றப்படலாம். ஆனால் கேள்வி எதையுமே கேட்காதே. நீ என்ன செய்கிறாய் என்பதை நினைத்தும் பார்க்காதே.ஏழைகளுக்குத் தரும் தானத்தைப் பற்றிப் பெருமையாகச் சொல்லிக் கொள்ளாதே. அதற்காக ஏழைகள் நன்றி தெரிவிப்பதையும் எதிர்பார்த்து நிற்காதே. ஆனால் நீ அந்த ஏழைகளிடம் நன்றி உணர்வு மிக்கவனாக இரு. அவர்களுக்குத் தான தர்மம் செய்யும் வாய்ப்பை அவர்கள் உனக்கு ஏற்படுத்திக் கொடுக்கிறார்கள் அல்லவா? அதற்காக நீ அவர்களிடம் நன்றி உள்ளவனாக இரு.

கர்ம யோகம் என்பது என்ன? கர்ம ரகசியத்தின் ஞானம்தான் கர்மயோகம். இந்தப் பிரபஞ்சத்தில் அங்கும் இங்குமாகத் தள்ளப்பட்டும் மோதப்பட்டும் திண்டாடி, நீண்ட காலத் தாமதத்திற்குப் பிறகு, அடிக்கப்பட்டும் புடைக்கப்பட்டும் அல்லலுற்ற பிறகு விஷயங்களை உள்ளது உள்ளபடியே அறிந்துகொள்ளும் முறைக்கு மாறாக—நாம் கர்ம யோகத்திலிருந்து கர்மத்தின் ரகசியத்தைக் கற்கிறோம். கர்மம் செய்யும் முறையை அறிகிறோம். உயிர் தரக்கூடிய கர்மத்தின் ஆற்றலை, ஒழுங்காக அமைக்கக் கூடிய வல்லமையைத் தெரிந்து கொள்கிறோம்.

பிரம்மாண்டமான ஒரு சக்திக் குவியல் நமக்குக் கிடைத்தும், அதை எப்படிப் பயன்படுத்துவது என்பதை நாம் அறியாமல் போய்விட்டால், அந்த ஆற்றல் முழுவதும் வீணான வகையிலே செலவழிக்கப்பட்டுப் போகலாம். பணி செய்வதை, கர்மம் செய்வதை ஒரு விஞ்ஞான முறைப் பிரயோகமாகக் கர்மயோகம் செய்ய உதவுகிறது.

இந்த உலகிலே நடைபெறும் எல்லா வேலைகளையும் மிகச் சிறப்பான முறையில் எப்படிப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்பதை நாம், கர்ம யோகத்தின் மூலமாகத் தெரிந்து கொள்கிறோம்.

கர்மம் தவிர்க்க முடியாத ஒன்று. செய்தே ஆகவேண்டிய ஒன்று. அவ்விதம் அது இருப்பது தான் மிகமிக நல்லது. ஆனால் நாம் மிக உயர்ந்த நோக்கத்தை அடிப்படையாகக்கொண்டு கர்மம் புரியவேண்டும்.

'இடையருமல் கர்மம் செய். ஆனல் கர்மத்திடம் உள்ள எல்லாப் பற்றையும் விட்டுவிடு' உன்னை எதனோடும் ஐக்கியப்படுத்திக் கொள்ளாதே. எதனோடும் சேர்ந்து நீயும் அதுவும் ஒன்று என்று நினைக்காதே. உன்னுடைய மனதை சுதந்திரம் உள்ளதாக வைத்திரு.

நீ பார்க்கும் இவைகள் எல்லாம், இந்தத் துன்பங்களும் துயரங்களும், இந்த உலகின் இன்றியமையாத நிலைமைகளே ஆகும். வறுமையும் செல்வமும் சுகமும்—எல்லாமே கண நேரம் இருந்து மறைபவைகள் ஆகும். அவை நம்முடைய நிஜ சொரூபத்திற்குச் சொந்தமானவையே அல்ல. நமது சொரூபமோ, இன்பம் துன்பம் என்பவைகளை எல்லாம் கடந்து, வெகு வெகு தொலைவில் அப்பால் இருந்து கொண்டிருக்கிற ஒன்றாகும். புலன்களின் விஷயங்களுக்கு எல்லாம் அது அப்பாற்பட்டது. சிந்தனையின் ஆற்றல்களுக்கு எல்லாம் அது அப்பாற்பட்டது.

என்றாலும்கூடக் காலமெல்லாம் நாம் கர்மம் செய்தபடியே இருக்க வேண்டும். 'பற்றின் மூலமாகத்தான் துன்பம் வருகிறது; கர்மத்தின் மூலமாக அல்ல.'

நாம் செய்யும் கர்மத்துடன் நம்மை நாம் ஒன்றுபடுத்திக்கொண்ட உடனேயே, நாம் துன்பப்பட ஆரம்பிக்கிறோம். ஆனல் கர்மத்துடன் நாம் நம்மை ஐக்கியப்படுத்திக் கொள்ளாமல் இருந்தால், நாம் அந்தத் துன்பத்தை உணர மாட்டோம்.



சிந்தனைச் சோலை

# பயன் கருதா உதவி

**பி**றருக்கு உதவி புரியாத கருமிகள் உலகத்தில் வாழத்தான் செய்கிறார்கள். பூமிக்குப் பாரமாக வாழும் இவர்களை மனதில் கொண்டு தான் 'எச்சில் கையாலும் காக்கை ஓட்டாதவன்' என்ற சொற்றொடரே பிறந்திருக்கிறது. இவர்கள் மிகவும் கடைத்தரமானவர்கள்.

புகழுக்கு ஆசைப்பட்டுத் தான தர்மங்கள் செய்பவர்கள் உண்டு. மக்களுக்கு அறிமுகமான இவர்கள்கூட, பலராக இல்லாமல் ஒரு சிலராகத்தான் இருக்கிறார்கள். விளம்பரப் பிரியர்களான இவர்களை இரண்டாம்தரமானவர்கள் என்று சொல்லலாம்.

பயன் கருதாத மேகம் போன்று சிலர், இந்த இரும்பு யுகமான கலியுகத்திலும் வாழவே செய்கிறார்கள். பிரதிபலனை அவர்கள் ஒரு சிறிதும் எதிர்பார்ப்பதே இல்லை. 'ஒரு கை செய்வது மற்றொரு கைக்குக் கூட தெரியாது' என்பது போல, அவர்கள் ஒருவித விளம்பரமும் இல்லாமல் உலகத்துக்கு நன்மைகள் செய்கிறார்கள். அவர்களைப் பற்றி மக்களுக்கு ஒன்றுமே தெரியாது. ஆனல் ஆண்டவனுக்கு அவர்களைப் பற்றி மிகமிக நன்றாகத் தெரியும் அல்லவா? 'பூமிக்கு உப்பு' என்று கிறிஸ்தவ மதம் பாராட்டுவதைப் போல வாழும் இவர்களே, மனித வர்க்கத்தின் முதல்தரமான மக்கள் ஆவார்கள்.

உதவ மனம் இருந்தால், அப்படி உதவுவதற்கான மார்க்கத்தையும் ஆண்டவன் நிச்சயம் உருவாக்கிக் கொடுப்பான். கர்ணன் மரணத் தறுவாயில் 'எனக்குச் செல்வத்தைக் கொடு' என்று பகவானிடம் பிரார்த்திக்கவில்லை. 'தேவை' என்று கேட்பவர்களுக்கு இல்லை என்று சொல்லாமல் கொடுக்கக்கூடிய மன நிலையை எனக்குக் கொடு — என்றுதான் ஆண்டவனிடம் பிரார்த்தித்தான்.

**வி**ளையாட்டுப் பருவத்தைக் கடந்துவிட்ட பெரியவர்களே வாழ்க்கையை விளையாட்டாக அல்லவா கருதி பாழ்படுத்துகிறார்கள்? இதற்கு மாறாக நிக்கலாய் என்ற ஒரு பையன் ஓர் ஊரிலே வாழ்ந்து வந்தான்.

சிறிய பையனுக இருந்தாலும், நிக்கலாயிக்கு மனித வாழ்க்கையில் ஆழ்ந்த ஓர் அர்த்தம் இருப்பதாகத் தோன்றியது. விளையாட்டுப் பருவத்திலேயே நிக்கலாயிக்கு இப்படி ஒரு எண்ணம் இருந்ததால்தான், பிற்கால வாழ்க்கையில் அவன் ஒரு மகான் ஆனுன். கிறிஸ்தவ மதம் அவரை 'அன்புள்ளம் கொண்ட நிக்கலாய் முனிவன்' என்று இப்போதும் பாராட்டித் தலை வணங்குகிறது.

நிக்கலாய் அப்போது ஒரு சிறிய பையன். வயதில் சிறியவனுக இருந்தாலும் அவனுடைய உள்ளம் மிகவும் உயர்ந்தது. அன்பு செலுத்துவதும், இரக்கம் காட்டுவதும் நிக்கலாயினுடைய பிறவிக் குணங்களாகவே விளங்கின.

நிக்கலாயினுடைய தந்தை, அந்த ஊரிலே விரல் விட்டு எண்ணக்கூடிய பணக்காரர்களில் ஒருவராக இருந்தார்.

பணம் படைத்தவர்கள் அவ்வளவு பேருமே ஈகைக் குணம் உள்ளவர்கள் அல்ல. ஆனுல் சிறிய பருவத்திலேயே நிக்கலாயிக்கு ஈகைக் குணம் மிகுதியாக இருந்தது. 'இல்லாமையில் இருப்பவர்களுக்குக் கொடுப்பதற்காகத்தான், செல்வத்தை ஆண்டவன் கொடுத்திருக்கிருன்; நம்மை ஒரு வாய்க்காலாகக்கொண்டு ஏழை எளியவர்களுக்குச் செல்வம் பயன்பட வேண்டும் என்பதுதான் ஆண்டவனின் திருவுள்ளம்' என்று நிக்கலாய் கருதி வந்தான்.

ஒருமுறை இரண்டுமுறை அல்ல, பலமுறை விளம்பரம் எதுவும் இல்லாமல் பலருக்கும் நிக்கலாய் உதவி புரிந்திருக்கிருன். 'ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பது போல பின்வரும் நிகழ்ச்சி அவனுடைய கருணை உள்ளத்திற்கு நல்ல ஒரு சான்ருகத் திகழ்கிறது.

ஒருநாள், சிறுவனுன நிக்கலாய் ஒரு தெரு வழியாகப் போய்க் கொண்டிருந்தான். அப்போது ஒரு வீடு அவனுடைய கவனத்தைக் கவர்ந்தது.

அந்த வீட்டின் குடும்பத்தலைவன் ஓர் ஏழை. அவனும் அவனுடைய மனைவி மக்களும் பட்டினியால் வாடிக் கொண்டிருந்தார்கள். வறுமை அந்த வீட்டிலே கோர தாண்டவம் புரிந்து கொண்டிருந்தது.

நிக்கலாய் வீட்டின் ஒதுக்குப்புறமாக நின்று, அந்தக் குடும்பத்தில் இருப்பவர்கள் என்ன பேசிக்கொள்கிருர்கள் என்று உற்றுக் கவனித்தான். அப்போது மகள், தன் தந்தையிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்: 'அப்பா! பசி தாங்க முடியவில்லை. இன்றைக்காவது நாம் வெளியே போய் பிச்சை எடுத்துச் சாப்பிடலாம். அப்படி எதையாவது சாப்பிட்டால் தான் நமது உயிர் நிலைக்கும். இல்லாவிட்டால் இன்றைய தினமே நாம் அனைவரும் செத்துப் போக வேண்டிய நிலை வந்து விடும்.'

அவளுக்குப் பதிலாகத் தந்தை ஆறுதல் சொன்னுன்: 'மகளே! இன்னும் சிறிது பொறுத்துப் பார்ப்போம். கடவுள்தான் மனித குலம் முழுவதையும் காத்து இரட்சிக்கிருர். அவருடைய குழந்தைகளாகிய நம்மையும் பாதுகாப்பது அவரது பொறுப்பு அல்லவா? இன்றைய இரவாகிலும் ஆண்டவனின் திருவருள் வருகிறதா என்று பார்ப்போம். நம் அனைவரையும் பசிக் கொடுமையில் இருந்து காப்பாற்றும்படியும், பிச்சை எடுத்துத்தான் சாப்பிட வேண்டும் என்ற நிலைக்கு விட்டுவிட வேண்டாம் என்றும் ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்கிறேன்.'

அந்த ஏழைக் குடும்பத்தினரின் உரையாடல் நிக்கலாயின் இதயத்தைத் தொட்டது. அவன் யோசனையில் ஆழ்ந்தபடியே மௌனமாக வீடு திரும்பினுன்.

வீட்டுக்குள் நுழைந்ததும், தன்னுடைய வீட்டில் மூன்று தங்கக் கம்பிகள் இருந்ததை நிக்கலாய் பார்த்தான். உடனே தாமதிக்காமல் அவைகளில் ஒன்றை எடுத்துக்கொண்டு ஏழையின் வீட்டை நோக்கி விரைவாக நடந்தான்.

அப்போது இரவு சூழ ஆரம்பித்திருந்தது. நிக்கலாய், தான் கொண்டு வந்த தங்கக் கம்பியை யாருக்கும் தெரியாமலும் இரகசியமாகவும் அந்த ஏழையின் வீட்டு ஜன்னல் வழியாக வீசினுன். பிறகு ஒன்றும் நடக்காததைப்போல அமைதியாகத் தனது வீட்டுக்குப் போய்ச்சேர்ந்தான்.

'பசிப்பிணி மருத்துவன்', 'பசிப்பிணி என்னும் பாவியது தீர்த்தோன்' என்று எல்லாம் பசியின் கொடுமையை அகற்றுபவர்களைத் தமிழ் நூல்கள் பாராட்டிப் பேசுகின்றன.

பசியால் வாடிய குடும்பத்திற்கு, கருணை உள்ளம் கொண்ட சிறுவன் நிக்கலாய் தங்கக்

கம்பியைக் கிடைக்கச் செய்தான். அதைக் கொண்டு அந்த எளிய குடும்பம் பசியின் கொடுமையில் இருந்து தப்பியது.

மறுநாள் இரவு சூழ்ந்தது. அன்றைய தினமும் நிக்கலாய் முன்பு போலவே மற்றொரு தங்கக் கம்பியைக் கொண்டுவந்து ஏழையின் வீட்டு ஜன்னல் வழியாக வீசிவிட்டுப் போய் விட்டான்.

இவ்விதம் முதல் நாளும் இரண்டாம் நாளும் தங்களுக்குத் தங்கக்கம்பியைக் கிடைக்கச் செய்தவர் யார் என்ற விவரம் அந்த ஏழைக் குடும்பத்தவர்களுக்குத் தெரியாது.

மூன்றும் நாள் இரவும் ஒரு தங்கக்கம்பியை இரகசியமாக வீசும் எண்ணத்துடன் நிக்கலாய் அந்த வீட்டின் அருகிலே போனுன். அவன் தங்கக்கம்பியை ஜன்னல் வழியாகப் போட இருந்த சமயத்தில், வீட்டின் தலைவனுகிய ஏழை நிக்கலாயைப் பார்த்துவிட்டான்! அவனுக்கு விஷயம் விளங்கிவிட்டது.

நிக்கலாயைப் பார்த்த உடனேயே, அந்த ஏழையின் உள்ளம் நெகிழ்ந்தது. அவன் கையெடுத்துக் கும்பிட்டபடி, 'உங்கள் கருணை உள்ளம் எங்களைப் பசியின் கொடுமையால் சாகும் நிலையிலிருந்து காப்பாற்றியது' என்று நிக்கலாயிடம் நா தழுதழுக்க நன்றியுடன் கூறினுன்.

அப்போது நிக்கலாய் சொன்னுன்: 'ஐயா, ஆண்டவனுக்கே நீங்கள் நன்றி சொல்ல வேண்டும். கருணை உள்ளம் என்று சொல்வது ஆண்டவன் ஒருவனுக்கு மட்டுமே பொருந்தும். நாம் அனைவரும் வழிபடும் அந்த ஆண்டவனே என்னை உங்களிடம் அனுப்பி வைத்திருக்கிருர். எல்லாப் புகழுக்கும் உண்மையில் உரியவர் பகவானே ஆவார். என் உள்ளத்தில் அன்பு, கருணை என்று ஏதாவது இருக்குமானுல், அதை என்னிடம் வைத்திருப்பவர் நமது பகவானே ஆவார். நாம் அனைவரும் ஆண்டவனுக்குத்தான் நன்றி சொல்லக் கடமைப்பட்டவர்கள்.'

பிரதிபலனை எதிர்பார்க்காமல் பிறருக்கு உதவுவது, அன்பு பாராட்டுவது ஆகியவைகள் தெய்விக குணமாகும். அந்தக் குணம் பந்தத்திலிருந்து விடுவித்து, தெய்வத்தை நோக்கி ஒருவனைச் செலுத்துகிறது. இதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் 'தயை' என்று சொல்கிருர்.

உற்றூர் உறவினர்கள், நண்பர்கள், நமக்கு வேண்டியவர்கள் ஆகியோரிடம் கொள்ளும் அன்பு, பிரதிபலனை எதிர்பார்த்துச் செய்யும் காரியங்கள் — ஆகியவைகள் தெய்வத்திடம் இருந்து நம்மை விலகச் செய்து பந்தப்படுத்துகின்றன. இதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் 'மாயை' என்று கூறி தெளிவுபடுத்தி இருக்கிருர்.

நிக்கலாயிடம் தயை என்னும் பண்பு அபரிமிதமாக இருந்தது. ஆதலால் ஒரு ஞானியின் நிலை தானுகவே அவருக்கு வந்தது.

—சத்தியகாமன்



தக்கவர்களுக்கு உதவி செய்தல்; நடுவு நிலைமை தவருமல் இருத்தல்; அனைவரிடமும் நட்பு கொள்ளுதல்; பொய்மையை விலக்கி உண்மையில் நிற்றல் — ஆகிய நான்கு கடமைகளை எனது மதம் கூறுகிறது.

—ஜராதுஷ்டிரர்

அறிவுத் துணிவுகள், தர்ம கொள்கைகள் இவற்றிலும் பொன்னைப் போல நீடித்து நிற்பனவும் வெற்றிலையைப் போல விரைவில் அழிவனவும், ஒட்டாஞ்சல்லி போல பயனற்றனவும் உண்டு.

—பாரதியார்

இன்று செய்யக்கூடிய காரியத்தை நாளைக்குச் செய்யலாமென்று தாமதப்படுத்தி வைப்பதனுல், அந்தக் காரியம் பலமான சேதமடைந்து போகும். எதையும் தோன்றிய மாத்திரத்திலேயே சூட்டோடு செய்யும்போது, அதில் வெற்றி பெரும்பாலும் நிச்சயமாகக் கிடைக்கும். அதைத் தூங்கப்போட்டுவிட்ட பிறகு செய்யப்போனுல், அதில் ஆரம்பத்தில் இருந்த ரசம் குறைந்து போகும். அதற்குத் தக்கபடி பயனும் குறை வெய்தும்.

—பாரதியார்

# ஸ்ரீ ராமகிருஷ்ணருடன் ஒருநாள்

அசுவினி குமார் தத்தர்

**1881**ஆம் ஆண்டு நவராத்திரி விடுமுறையில் ஸ்ரீ ராமகிருஷ்ணரை முதல் முறையாக நான் சந்தித்ததாக நினைக்கின்றேன்.

தட்சிணேஸ்வரத்திற்குப் படகில் சென்றிருந்தேன். அங்குள்ள கங்கைப் படித்துறை மீதேறிச் சென்று, அருகில் இருந்த ஒருவரிடம் 'பரமஹம்சதேவர் எங்கே இருக்கிறார்?' என்று விசாரித்தேன்.

கோவிலின், வடதிசையிலுள்ள தாழ்வாரத்தில் திண்டின்மேல் சாய்ந்து உட்கார்ந்திருந்த ஒருவரைச் சுட்டிக்காட்டி, 'அதோ, அவர்தான் பரமஹம்சதேவர்' என்று சொன்னார் அவர்.

பார்த்த பிறகு, 'இவர் கனவான்களைப் போல் திண்டின்மேல் சாய்ந்து உட்காரும் பழக்கம் இல்லாதவர் என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆகவே இவர் ஒருவேளை பரமஹம்சராக இருக்கலாம்' என்ற முடிவிற்கு வந்தேன்.

திண்டின் அருகில் அவருடைய வலப்புறத்தில் ஒரு கனவான் உட்கார்ந்திருந்தார். அவர் தான் ராஜேந்திரமித்திரர் என்று கேள்வியுற்றேன். அவர் வங்காள மாநில அரசின் உதவிச் செயலாளராக இருந்தார். அவரை அடுத்து இன்னமும் பலர் உட்கார்ந்திருந்தார்கள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் ராஜேந்திரரிடம், 'கேசவர் வருகிறாரா, என்ன, என்று பார்' என்று சொன்னார். ஒருவர் சிறிது



தட்சிணேஸ்வரக் காளி கோயிலும் கங்கைப் படித்துறையும்

ஸ்ரீ ராமகிருஷ்ணர் கருப்புக்கரை வேஷ்டியை அணிந்திருந்தார். அவர் திண்டின்மேல் சாய்ந்திருப்பதையும் கருப்புக்கரை வேஷ்டியை உடுத்தியிருந்ததையும் கண்ட நான், 'இவர் எப்படிப்பட்ட பரமஹம்ஸர்?' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன்.

ஆனால் அவரை நான் சற்று நெருங்கிய போது, அவர் கால்களை மடக்கி முட்டுகளை உயர்த்தி, அவற்றிற்கு மேலாகத் தமது கைகளைக் கோத்துக்கொண்டு திண்டின்மேல் பாதி சாய்ந்து வீற்றிருப்பதைக் கண்டேன். இதைப்

தூரம் வெளியில் சென்று பார்த்துவிட்டுத் திரும்பி வந்து 'இல்லை!' என்று தெரிவித்தார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு வெளியே சலசலப்புக் கேட்டபோது மறுபடியும் குருதேவர், 'பார், மீண்டும் பார்' என்றார். இந்த முறையும் ஒருவர் பார்த்துவிட்டு 'இல்லை' என்று அதே பதிலையே சொன்னார்.

இதைக் கேட்ட உடனே பரமஹம்சதேவர் சிரித்தபடி, ''இலைகள் சிலிர்க்கின்றன. ராதை, 'இதோ எனது பிராணநாதர் வருகிறார்'

என்று சொல்கிறார். பார்த்தாயா! வாழ்நாள் முழுவதும் கேசவர் இப்படியேதான — வருகிறேன் என்று சொல்வார். ஆனால் வர மாட்டார்'' என்று சொன்னார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு மாலை சாய்ந்து இருள் சூழ இருந்த சமயத்தில், கேசவர் தமது சீடர்கள் புடைசூழ அங்கு வந்து சேர்ந்தார்.

வந்த உடனேயே கேசவர், தரையில் தலை படிய, குருதேவரை விழ்ந்து வணங்கினார். குருதேவரும் அதைப் போலவே தமது வணக்கத்தைக் கேசவருக்குத் தெரிவித்தார்.

சிறிது நேரம் கடந்தது. குருதேவர் பாதி யுணர்வு அகமுகப்பட்ட சமாதி நிலையில் ஜகன் மாதாவை நோக்கிப் பின்வருமாறு சொன்னார்: ''நான் ஒரு சொற்பொழிவு செய்யப் போவதைப் போல, கல்கத்தா மக்களை எல்லாம் திரட்டிக் கொண்டு வந்திருக்கிறாயே! தாயே, அது என்னால் முடியாது. வேண்டுமானால் நீயே பிரசங்கம் செய்து கொள். இந்த மாதிரி சொற்பொழிவு வேலைகளை எல்லாம் என்னால் செய்ய முடியாது.''

தெய்விகம் ததும்பும் இந்த நிலையிலேயே புன்முறுவலுடன் குருதேவர் தொடர்ந்து பேசினார். ''நான் உன்னுடைய குழந்தை. நான் சாப்பிடுவேன், குடிப்பேன், மகிழ்ச்சியாக இருப்பேன். சாப்பிடுவேன், விளையாடுவேன், தூங்குவேன். ஆனால் என்னால் சொற்பொழிவு செய்ய முடியாது'' என்று சொன்னார்.

இதைக்கண்ட கேசவபாபு பரவசத்துடன் மெய்மறந்தவராகக் காட்சி தந்தார். இடையிடையே அவ்வப்போது அவர் பரவச நிலையில் 'ஆஹா, ஆஹா' என்றார்.

குருதேவரின் இந்த நிலையைக் கண்டு, 'இதென்ன, இது வெளிவேஷமாக இருக்க முடியுமா?' என்று நான் நினைத்தேன். இதற்கு முன்பு அத்தகைய நிலையை ஒருபோதும் நான் கண்டதும் கிடையாது. மேலும் அதோடு என்னுடைய ஆழ்ந்த நம்பிக்கையைக் குறித்தும் நீங்கள் நன்கு அறிவீர்கள்.

சமாதி நிலை கலைந்ததும் குருதேவர் கேசவரிடம் சொன்னார். ''கேசவரே, ஒருநாள் உங்களுடைய பிரார்த்தனைக் கூட்டத்திற்குச் சென்றிருந்தேன். அப்போது நீ உன்னுடைய சொற்பொழிவின் மத்தியில், 'பக்தி என்னும் நதியில் நாம் மூழ்கி நேராக சச்சிதானந்தக் கடலைச் சென்றடைவோம்' என்று கூறினாய். அப்போது உடனே மேலே நிமிர்ந்து உயரப் பார்த்தேன். (மாடியின்மேல் வரிசையாகக் கேசவருடைய மனைவியும் மற்றும் பல பெண்களும் உட்கார்ந்து இருந்த இடத்தைப் பார்த்தேன்) பிறகு 'இந்தப் பெண்களுடைய கதி என்னவாகும்' என்று நினைத்துக் கொண்டேன்.

''கேசவரே, இதோ பார் நீங்கள் இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறீர்கள். அப்படியிருக்கும்போது ஒரேயடியாக சச்சிதானந்தக் கடலை எப்படி நீங்கள் சென்றடைய முடியும்? வாலில் செங்கல் கட்டப்பட்டுள்ள கீரிப்பிள்ளையைப் போல நீங்கள் இருக்கிறீர்கள். ஏதாவது ஆபத்து ஏற்பட்டால், இந்த கீரிப்பிள்ளை உடனே சுவரின்மேல் ஏறி அங்குள்ள பொந்தில்போய் உட்கார்ந்து கொள்ளும். ஆனால் அது நீண்ட நேரம் அங்கேயே எப்படித் தொடர்ந்து தங்க முடியும்? செங்கல்லின் பாரம் அதைக் கீழே பிடித்து இழுக்கும். அதன் காரணமாக உடனே அது 'பொத்' என்று கீழே விழும்.

''அதைப்போல நீங்களும் ஏதோ கொஞ்சம் தியானம் பழகலாம்! ஆனால் மனைவி, மக்களாகிய செங்கல் பாரம் உங்களை அந்த நிலையிலிருந்து கீழே இழுத்து விட்டுவிடும். நீங்கள் வேண்டுமானால் பக்தி நதியில் மூழ்கலாம். ஆனால் மீண்டும் நீங்கள் வெளியே வரவேண்டி இருக்கும். நீங்கள் பக்தி நதியில் மூழ்குவீர்கள், எழுந்திருப்பீர்கள். மறுபடியும் மூழ்குவீர்கள், எழுந்திருப்பீர்கள் - இவ்விதம் மாறி மாறி உள்ளே புகுந்தும் வெளியே வந்தும் முன்னேறிச் செல்வீர்கள். ஒரேயடியாக நீங்கள் எப்படி பக்தி நதியில் மூழ்கி மறைந்துபோக முடியும்.?''

கேசவர்: ''இல்லறத்தவர்களுக்கு அது முடியவே முடியாத காரியமா? மகரிஷி தேவேந்திர நாத் தாகூர் இருக்கிறாரே?''

ஸ்ரீ ராமகிருஷ்ணர் மெல்லிய குரலில் 'தேவேந்திர நாத் தாகூர் — தேவேந்திரர்— தேவேந்திரர்' என்று இரண்டு மூன்று முறை சொல்லி கைகூப்பிக் கொண்டே பலமுறை அவரை வணங்கினார்.

பிறகு தொடர்ந்து பேசினார்: ''அதைப்பற்றி ஒரு கதை சொல்கிறேன் கேள். ஒரு பக்தர்

வீட்டில் துர்க்கா பூசை வருடா வருடம் மிக மிக கோலாகலமாக நடந்து வந்தது. அப்போது காலையிலிருந்து மாலைவரை அந்த பக்தர் ஆடுகளை தேவிக்குப் பலியிடுவார். ஆனால் சில வருடங்களுக்குப் பிறகு பலியிடுவது அவ்வளவாக விமரிசையாக இல்லாமல் மிகமிகக் குறைந்து போய்விட்டது. பிறகு அவரிடம் யாரோ ஒருவன், 'என்ன ஐயா, இப்போதெல்லாம் உங்கள் வீட்டில் துர்க்கா பூஜையின் போது முன்புபோல அவ்வளவாக பலியிடுவது இல்லையே' என்று கேட்டான்.''

''அதற்கு அந்த பக்தர், 'ஐயா! இப்போது என்னுடைய பற்கள் விழுந்து விட்டனவே' என்று பதில் சொன்னார். ஆகவே வயதாகி விட்ட நிலையில் தேவேந்திரர் இப்போது தியானம் பழகுகிறார். இது இயற்கைதானே! ஆனால் எப்படி இருந்தாலும் அவர் ஒரு பெரிய மனிதர்தான். அதில் ஒன்றும் சந்தேகமே இல்லை.''

குருதேவர் மீண்டும் தொடர்ந்து பேசினார்: ''மனிதன் எவ்வளவு காலம் மாயையாகிய வலையில் சிக்கிக் கொண்டிருக்கிறானே, அவ்வளவு காலமும் அவன் இளநீரைப் போல இருக்கிறான். தேங்காய் இளநீராக இருக்கும்போது, அதனுடைய வழவழப்பான பகுதியைச் சுரண்டி எடுக்க முயற்சித்தால் அதோடு கூட சிறிது ஓடும் ஒட்டிக்கொண்டு வெளியே வரும். ஆனால் மாயையிலிருந்து விடுபட்ட நிலை, முற்றிய கொப்பரைத் தேங்காயைப் போன்றது. ஓடும் பருப்பும் தனித்தனியாகப் பிரிந்துவிட்ட நிலை. நீ கொப்பரையை எடுத்துக் குலுக்கும்போது உள்ளே 'டப்டப்' என்று ஆடுகிறது. அதைப் போல ஆத்மா வேறு, உடல் வேறு. உடலுடன் ஆத்மா ஒட்டி இருப்பதில்லை.'

''இந்த 'நான்'தான் எல்லா தொந்தரவுகளையும் உண்டு பண்ணுகிறது. இந்தப் போக்கிரிப் பயல் 'நான்' போய்த் தொலைய மாட்டானா என்ன? பாழடைந்த இடிந்த வீட்டுக் குப்பை குவியலில் இருந்து அரசமரம் முளைக்கிறது. இன்று அதைப் பிடுங்கி விடு. திரும்பவும் நாளைய தினம் மீண்டும் அதே இடத்தில் துளிர்த்து குருத்து விட்டுத் தழைப்பதைப் பார்ப்பாய். இந்த 'நான்' என்கிற ஆணவத்தினுடைய நிலையும் அப்படிப்பட்டது. வெங்காயம் வைத்திருந்த கிண்ணத்தை ஏழுமுறை தண்ணீர் விட்டுக் கழுவினாலும் அதனுடைய துர்நாற்றம் மட்டும் போகவே போகாது.''

இவ்விதம் பரமஹம்சதேவர் பேசிக்கொண்டிருந்தபோது, பேச்சின் நடுவே அவர் கேசவரிடம் சொன்னார்: ''என்ன, கேசவரே! உங்களுடைய கல்கத்தா கனவான்கள் கடவுள் இல்லை என்று சொல்கிறார்களாமே. ஒரு கல்கத்தா கனவான் மாடிப்படி மேலே ஏறிக் கொண்டிருக்கிறார். அவர் ஒரு அடி எடுத்து வைத்து விட்டு மற்றொரு அடி எடுத்து வைப்பதற்குள்ளாக, ''ஏ, இந்த என்னுடைய விலாவின் பக்கம் என்ன ஆயிற்று! என்னுடைய இந்த பக்கம்!'' என்று சொல்லிக்கொண்டே கீழே விழுந்து மூர்ச்சை அடைந்து விடுகிறார். ஒரே கூச்சல், 'கூப்பிடு, கூப்பிடு, டாக்டரைக் கூப்பிடு' என்று உறவினர்கள் இரைச்சல் போடுகிறார்கள். ஆனால் வைத்தியர் வந்து சேர்வதற்குள்ளாகவே, எல்லாம் முடிந்து கனவானுடைய உயிர் போய் விடுகிறது. இப்படிப்பட்ட 'புள்ளிகள்' தான் கடவுள் இல்லை என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.''

ஒன்று அல்லது ஒன்றரை மணி நேரத்திற்குப் பிறகு கீர்த்தனம் ஆரம்பித்தது. அப்போது நான் கண்ட காட்சியை இந்தப் பிறவியில் மட்டுமல்ல — இனி வரப்போகிற பிறவிகளிலும் என்னால் மறக்கவே முடியாது. அங்கிருந்த அனைவரும் நடனமாட ஆரம்பித்தார்கள். கேசவரும் சேர்ந்து ஆடியதைப் பார்த்தேன். மையத்தில் குருதேவர் இருந்தார். அவரைச் சுற்றிச் சுற்றி அங்கிருந்த மற்றவர்கள் அனைவரும் நடனம் ஆடினார்கள். அப்படி ஆடிக்கொண்டிருந்தபோதே குருதேவர் ஆடாமல் அசையாமல் நின்றுவிட்டார். அது சமாதிநிலை. இவ்விதம் நீண்டநேரம் கழிந்தது. அவர் சொன்னதை எல்லாம் கேட்ட பிறகும், நேரில் இவைகளை எல்லாம் கண்ணால் கண்டபிறகும், 'ஆமாம் இவர் நிச்சயமாக ஒரு பரம்ஹம்சர்தான்' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன்.



தன்னை வெட்டும் கோடாரிக்கும், நறுமணம் தரும் சந்தண மரம் போன்றவன் நேர்மை மிக்க மனிதன்.

—துளசிதாசர்

# வேதமும் ரிஷிகளும்

தமிழாக்கம்: 'அண்ணா' சுப்ரமண்யம்

### 1. பிரம்ம தத்துவத்தைக் கண்டு வெளியிட்டவர்கள் ரிஷிகள்

புனிதமான ஞானத்தின் இறைவனே! ரிஷிகள் வாய்திறந்து முதன்முதலாகச் சிறந்த பேச்சைப்பேசியபோது பெயரில்லாத ஒன்றிற்கு அவர்கள் பெயரளித்தார்கள். அது உயர்வற உயர்ந்து புனிதம் நிறைந்து, அவர்களுடைய உள்ளத்தில் ஒளிந்திருந்த பிரம்ம தத்துவத்தை வெளியிடுவதாக ஆயிற்று.

—ரிக்வேதம் 10–71–1

மந்திரத்தை இறைவனே தோற்றுவிக்கிறான். நமக்கு வழிவகுக்கும் அவனை நாம் ஆர்வத்துடன் அணுகுகிறோம். அவன் மந்திரத்தை உள்ளத்தில் வெளியிடுகிறான். மேகத்திலிருந்து வரும் மழையைப் போல இந்த ஸூக்தம் என்னுடைய அந்தராத்மாவிலிருந்து பொழியப் பட்டதாகும்.

—ரிக். 7–94–1

அவனை அறிவது நமது மனித இயல்பால் (புருஷத்வத்தால்) அன்று.

—ரிக். 5–48–5

### 2. அவர்களுடைய உண்மை உணர்வு

அகக்கண் படைத்த இம்முனிவர்கள் தங்களுடைய உண்மை உணர்வு ஒளிவீசும்படியாக மேலே செல்லுகிறார்கள்.

—ரிக். 7–90–5

துதிகளிலும் ஸூக்தங்களிலும் ஒன்றுபட்டு விளங்குபவர்களாய், தெய்வத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாய், தெய்வத்தைப் போன்றவர்களாய், ஸப்தரிஷிகள் ஆழ்ந்த அறிவுடையவர்களாய் தேரின் முன் வீற்றிருப்பவனைப்போல கடிவாளங்களைக் கைக்கொண்டனர்.

—ரிக். 10–130–7

—யஜுர்-வாஜஸனேயி 34-49

தியானத்திலாழ்ந்தவர்களாய், இறைவனைப் போற்றுபவர்களாய், அந்தராத்ம சக்தி படைத்த இவர்கள் அவனை ஏற்றுகின்றனர்.

—ரிக். 3–8–4

ஆதிரிஷிகளின் வார்த்தைகள் எப்பொழுதும் உண்மை.

—ரிக். 1–82–2

அவர்கள் இயற்கையாகவே ஒளி பொருந்தியவர்கள்.

—ரிக். 3–54–4

முனிவர்கள் ஆன்மாவாலும் மனதாலும் பார்க்கிறார்கள்.

—ரிக். 10–177–1

ரிஷி, மனித சமூகத்தை உயர நின்று நோக்குகிறார்.

—ரிக். 3–54–6

### 3. அவர்கள் மறைகளை எப்படி பரப்பினார்கள்

விரைவில் அருள்புரியும் உம்மிடம் நான் வேண்டுவது, எதன் மூலம் நாங்கள் ஒளியைப் போல் மக்களிடை பரவக்கூடுமோ அந்த ஆன்மீகச் செல்வம்.

—ரிக். 5–54–15

ஒளியை ஆள்பவர்களே! மகிமை பொருந்திய சொற்களை நான் மனித சமூகங்களில் பேசுவதற்கு என்னைத் தேன் போன்ற இனிமையால் நிரப்பியருளுங்கள்.

—அதர்வண வேதம் 6–91–2;9–1–18

ஏழு சமூகங்களுக்கும், மனித வர்க்கம் முழுவதையும் தழுவும் எட்டாவது சமூகத்திற்கும் இறைவனாகிய அவன், என்னுடைய மார்க்கங்களை இனிமையாகச் செய்யட்டும். ஆனந்தமயமான இச்சொற்களை நான் பிராம்மணர்களிடையேயும், க்ஷத்திரியர்களிடையும், வைசியர்களிடையும், சூத்திரர்களிடையும், என்னுடைய சமூகத்திலும், அயலார் சமூகத்திலும், எங்கெங்கும் மக்களிடை பேசுவதற்கு என்னுடன் பரிபூரண மனஒற்றுமை வாய்ந்த ஒரு துணையையும் அளிக்கட்டும்.

—யஜுர் 26-1-2

### 4. ஞான நூல்கள்

அந்த விச்வ யாகத்திலிருந்து (சிருஷ்டி காலத்தில்) ரிக்வேதமும், ஸாமவேதமும், சந்தஸ்ஸுகளும், யஜுர்வேதமும் தோன்றின.

—ரிக். 10–90–8; யஜுர் 31–7;
அதர்வ 19–6–13

வேதங்கள் விசுவரூபம் படைத்தவை. (அவை வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளையும் அடிப்படைத் தத்துவத்தையும் விளக்குபவை)

—அதர்வ 4–35–6

சுரோத்திரியன் (வேதத்தைக் கற்று அதைக் கற்பித்துக் காப்பவன்) வேத மந்திரங்கள் வாழுமிடமான உத்தம ஸ்வர்க்கம் போன்றவன்.

—ரிக். 1–164–35

வேதத்தின் ஸத்தியத்திலுறையும் (தேஜஸ்ஸை) ஒளிப்பிழம்பை எனக்கு அருள்வாயாக.



—ஸாமவேதம் 624

# பரமார்த்தப் பிரசங்கம்

சுவாமி விரஜானந்தர்

265. பழைய வினைகளின் விளைவுகளை எல்லோரும் அனுபவித்தே ஆகவேண்டும்.

வினைகளுடைய பயன்களைப் பெற்று முடிக்காமல், அதாவது தனக்குரிய இன்ப துன்பங்களின் அனுபவத்தைப் பட்டுத் தீர்க்காமல், இதனால் தனக்கு ஏற்படும் படிப்பினையைக் கற்றுக் கொள்ளாமல் — ஒருவருக்கு முக்தி கிடைக்காது.

ஆனால், அவதார புருஷர் ஒருவரிடமோ அல்லது மகாபுருஷர் (பகவானுடைய விசேஷ ஆதேசத்துடன் வரும் நித்திய பரிபூரணராகிய) ஒருவரிடமோ அடைக்கலம் புகுந்தால், அவருடைய கிருபை காரணமாக — இனி விளைவிக்க இருக்கும் மறைவான சம்ஸ்காரங்கள் வெளிப்பட்டுத் தமது வேலையைச் செய்து முடிக்கப் பல பிறவிகள் தேவைப்படுவதாக இருந்தாலும் — இந்த ஒரு பிறவியிலேயே அந்த வினைகள் தீர்க்கப்பட்டுப் போகின்றன.

266. உலகில் நாம் வழக்கமாகப் பார்ப்பது இதுதான்: நல்ல பாதையில் செல்பவர்களுக்கு சம்சாரத் துயர்களுக்கும் கஷ்டங்களுக்கும் முடிவே இருப்பதில்லை. ஆனால் தீய வாழ்க்கை வாழ்ந்து அதர்மத்தைக் கடைப்பிடிப்பவர்களில் பலர், வெகு சுகமாகவும் சந்தோஷமாகவும் தங்கள் வாழ்க்கைக் காலத்தைக் கடத்தி வருவதைப் போலத் தோன்றுகிறார்கள்.

இத்தகைய சந்தோஷப் பேர்வழிகளிடம் புலன் இன்பத்திற்கான ஆசை வெகு உறுதியாக இருப்பதால், போக அனுபவமே அவர்களுக்கு வாழ்வின் முதலும் முடிவுமாக இருக்கிறது. எந்த வழியிலாவது போகப் பொருள்களைப் பெற முடியுமானால், அவர்கள் தங்களைப் பெரிய புத்திசாலிகள் என்று நினைக்கிறார்கள். தாங்கள் மிகவும் சுகமாக இருப்பதாக நினைக்கிறார்கள்.

மலத்தில் வாழும் புழு மலத்தில் மட்டுமே இன்பம் காண்கிறது. மலத்தாலேயே அதன் உடல் வளர்ச்சி பெறுகிறது. மலத்தைப் போன்ற மக்களும் வெகு முட்டாள்களாகவும் மோகத்திற்கு உட்பட்டவர்களாகவும் இருப்பதால் ஒரு விஷயத்தைப் பற்றி அவர்கள் சிந்தித்துப் பார்ப்பதே இல்லை: இந்தப் பிறவியிலே குவித்து வைக்கும் அக்கிரமச் செயல்கள் என்னும் சுமைக்காக, மறு பிறவியிலே அவர்கள் பயங்கரமான வேதனையையும் துன்பத்தையும் அனுபவித்தாக வேண்டியிருக்கும்! என்பதை நினைத்துப் பார்ப்பதில்லை. யார் பார்த்தார்கள்- அவர்களுடைய மிருக இயல்பு காரணமாக, கீழ்த்தரமான மிருக உடலில்கூட அவர்கள் பிறவி எடுக்கவேண்டி வந்தாலும் வரலாம்!

இது ஒருபுறமிருக்க, அவ்விதம் ஆழ்ந்த அஞ்ஞானத்தில் மூழ்கி கிடப்பவர்கள், விவேகமாகிய மனச்சாட்சி என்னும் தேள் கொட்டுவதை உணராமல் இருப்பவர்கள் — ஆகிய இவர்கள் மனித வடிவத்தில் வாழும் மிருகங்களே ஆவார்கள்.

267. சுயநலத்தினால் குருடாகி உள்ளவர்கள், தங்களுடைய புலன்களுக்கு அடிமைப்பட்டவர்கள், தீயவழியில் சேமித்த செல்வமாகிய மதுவினால் பித்தேறியவர்கள் — ஆகிய இவர்கள் தங்களுடைய இதயத்தில் உண்மையான சுகமும் சாந்தியும் கொண்டிருக்கிறார்கள் என்று ஒருகணம்கூட நினைக்காதே.

வெளியே இவர்கள் எவ்வளவு சுறுசுறுப்பாகவும் குதூகலமாகவும் காணப்பட்டாலும், விஷயம் இதுதான்: அவர்களிடம் இன்பமும் அமைதியும் இருக்காது. விஷய போகம் நிலைத்திருக்கும் வரையிலும் இனிமையாகத் தோன்றலாம். ஆனால் அது உள்ளத்தைத் துளைக்கும் வேதனைக்கும் சங்கடங்களுக்கும் காரணமாகும் நேரம் கட்டாயம் தொடர்கிறது.

புலன் இன்பத்தில் தோய்ந்துள்ளவர்களின் வாழ்க்கையில் இடைவிடாமல் பயமும், கவலையும், அசாந்தியும் கடைசியாக நம்பிக்கை குலைவும் நிறைந்து நிற்கும். அவர்கள் மரணத்தையும்கூட விரும்பும் அளவுக்கு இறங்கிவிடலாம். அல்லது தற்கொலையும் செய்து கொள்ளலாம். அவர்கள் பரிதாபத்துக்கு உரியவர்கள் ஆகிறார்கள்.



# மதிப்புரை

**திருத்தணிகைப் பிள்ளைத் தமிழ்:**

[மூலமும் உரையும், ஸ்ரீகந்தப்ப முனிவர் அருளிய சந்நிதி முறையில் அடங்கியது. அரும் பொருள் உரை யாசிரியர்: திரு நல். முருகேச முதலியார். வெளியிடு: ஸ்ரீகுமாரதேவர் மடம், தெற்கு வீதி, விருத்தாசலம், அடக்க விலை ரூ. 2.50.]

இந்தத் திருத்தணிகைப் பிள்ளைத் தமிழை வீரசைவ பரம்பரையில் உதித்த கந்தப்ப தேசிகர் என்ற ஸ்ரீ கந்தப்ப முனிவர் பாடியவராவர். இதற்கு ஆராய்ச்சி முன்னுரையுடன் அரும் பதங்களுக்கு உரை எழுதி ஒப்பிலா பணியை சாதித்துள்ளார் திரு நல். முருகேச முதலியார். திருப்போரூர் சந்நிதி முறைக்கு நிகராகக் கருதப்படும் இந்நூல், பிரதிகளே கிடைக்காமல் மறைந்தும் மறந்தும் போய்விட்டது. இதை மிக்க பக்தி சிரத்தையோடு படித்து, பொருள் உணர்ந்து, பல்லாண்டுகளுக்கு முன்பு உரை நிகழ்த்தினர் திரு. முருகேச முதலியார். பின்பு ஆராய்ந்து புத்தக வடிவில் கொணர்ந்தார்.

இந்த நூலில் முருகப்பெருமானை குழந்தையாகப் பாவித்துப் பாடப்பட்டுள்ளது. இதற்கு அரும் பதவுரைகளை வழங்குவதோடு ஆங்காங்கு சித்தாந்த சாஸ்திரக் கருத்துக்களை, விளக்கியுள்ளார் திரு. முருகேச முதலியார். உபதேசங்கள் செறிந்த இந்த நூலில், வேதாந்த பரமான கருத்துக்களும் துறவு இன்றியமையாததாகும் என்ற கருத்தும் மேலோங்கி நிற்கின்றன.

இந்த அருமையான நூலைத் தமிழ்ப்பற்றும் தெய்வப்பற்றும் முருக பக்தியும் உடையோர் படித்து, உணர்ந்து, பெரும்பேறு எய்தலாம்.

**—சுவாமி ஸ்ரீரங்கானந்தர்**

**மன ஒருமையும் மாணவர் உலகமும்**

*[ஆசிரியர்: வி. எம். மந்திரம் பி.ஏ.பி.டி., வெளியிட்டோர்: 66, பெரியார் தெரு, சென்னை—600 083. விலை: ரூ. 2.]*

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் (Main) உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு. வி. எம். மந்திரம் அவர்கள், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரிடமும், சுவாமி விவேகானந்தரிடமும் அளவில்லாத பக்தி பூண்டவர். அந்த பக்தியின் வெளிப்பாடாக அவர் ஆற்றிய, ஆற்றி வரும் பணிகள் பல. மன ஒருமைப்பாட்டையும் மாணவர் உலகத்தையும் மையமாகக்கொண்டு அவர் எழுதிய இந்நூல், ஸ்ரீ ராமகிருஷ்ண—விவேகானந்த முத்திரையைப் பக்கத்திற்குப் பக்கம் அற்புதமாகப் பதித்திருக்கிறது.

இந்தச் சிறிய நூலில் 12 அத்தியாயங்களில் மாணவர்களுக்கு ஏற்ற கருத்துக்களை ஆசிரியர் விளக்கியிருக்கிறார். மன ஒருமைப்பாட்டைத் தலைசிறந்த முறையில் மாணவர்களுக்கு விளக்க வேண்டுமானால், விவேகானந்தரின் வாழ்வையும் வாழ்க்கையும்தானே எடுத்துச் சொல்ல முடியும்?

விவேகானந்தர் படித்த 'என்சைக்கிளோ பீடியா பிரிட்டானிகா' தொகுதிகளையும், ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாக்கையும், பிரம்மசரியத்தின் அவசியத்தையும் விளக்குவதற்காக ஆசிரியர் எடுத்துக்காட்டுகிறார். நூலாசிரியர், பிரம்மசரியத்தைப் பற்றி விவேகானந்தர் பல இடங்களிலும் தெரிவித்துள்ள கருத்துக்களையும் தொகுத்துக் கொடுத்திருந்தால் நூலுக்கு இன்னமும் மெருகுகூடி இருக்கும். மன ஒருமையின் பெருமைக்கு இது ஒரு நல்ல நூல். குறிப்பாக இளைஞர்கள் படிக்க வேண்டிய நூல். ஆசிரியரின் முயற்சிக்கு மனமார்ந்த வாழ்த்துக்கள்.

**—பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா**



## அன்பர்களுக்கு

சென்ற இதழ் விஜயம் தபாலில் சேர்ப்பதற்கு முன்பாக, அன்பர்கள் பத்திரிகை வந்து சேராதது பற்றிக் கடிதங்கள் எழுதியிருந்தார்கள். கடந்த மாத விஜயம் அதிகப் பக்கங்களுடன் சிறப்பு மலராக வெளியிடப்பட்டதால், மூன்று நாட்கள் தாமதமாகத் தபாலில் சேர்க்க நேர்ந்தது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

**— ஆசிரியர்**



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

(16—8—77 முதல் 15—9—77 வரை)

**ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி:**

| | |
|---|---|
| 5—9—77 திங்கள்: | ஸ்ரீகிருஷ்ண ஜன்மாஷ்டமி: சொற்பொழிவு (ஆரதிக்குப் பிறகு) |
| 11—9—77 ஞாயிறு: | காலை 8.30 முதல் 10.30 வரை **ஸ்ரீமத் பகவத்கீதா பாராயணம்** |
| மாலை 4 மணி முதல் 6 வரை | தர்ம ப்ரவசனரத்ன மஞ்சக்குடி ஸ்ரீ கே. ராஜகோபால சாஸ்திரி அவர்களால் ஹரிகதா காலக்ஷேபம் **'ஸ்ரீ கிருஷ்ணரின் ஜனனம்'** |
| **சத் சங்கம்:** ஞாயிறுதோறும் | மாலை 4 மணி முதல் 8 மணி வரை |
| மாலை 4 முதல் 4.20 வரை | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (21—8—77 & 4—9—77)<br>ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (28—8—77) |
| மாலை 4.20 முதல் 4.30 வரை | தியானம் |
| மாலை 4.30 முதல் 5.30 வரை | சொற்பொழிவு (தமிழ்)<br>1. **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்** திரு. V. R. கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (28—8—77)<br>2. **ஸ்ரீமத் பாகவதம்**-திரு 'அண்ணு' சுப்ரமண்யம் (4—9—77)<br>3. **ஸ்ரீமத் ராமாயணம்** டாக்டர் என். வீழிநாதன் (21—8—77) |
| மாலை 5.35 முதல் 6.30 வரை | சொற்பொழிவு (ஆங்கிலம்)<br>**ஸ்ரீமத் பகவத்கீதை**—சுவாமி கபீரானந்தர் |
| **சிறப்புச் சொற்பொழிவுகள்:**<br>சனி மாலை 5.45 மணிக்கு | 1. **தேவர்களின் தெய்வம்**—சுவாமி கீர்த்திதானந்தர் (20-8-77)<br>2. **இராமாயணத்தில் ஆராய்ச்சி** திரு. பி. ராமகிருஷ்ணன் (27—8—77)<br>3. **ஆன்மிகச் செல்வம்** சுவாமி கீர்த்திதானந்தர் (3—9—77)<br>4. **நாராயணீயம்** திரு. க. கோதண்டராமன் (10—9—77) |

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்**—(மாலை 5.45)

| | |
|---|---|
| திங்கள்: | (ஆங்.) **ஸ்ரீ ராமகிருஷ்ண கதாம்ருதம்**—சுவாமி அம்ருதானந்தர் |
| செவ்வாய்: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்**—சுவாமி கபீரானந்தர் |
| புதன்: | (தமிழ்) **மகாபாரதம்**—திரு 'அண்ணு' சுப்ரமண்யம் |
| வியாழன்: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத்பாகவதம்**—சுவாமி கோலோகானந்தர் (18—8—77, 1—9—77 & 15—9—77)<br>தியாகப் பிரம்மம் (தெலுங்கு) —சுவாமி சுவாத்மானந்தர் (25—8—77 & 8—9—77) |
| வெள்ளி: | (தமிழ்) **ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்** —பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா |
| வெள்ளி: | (ஆங்.) **ஸ்ரீமத் பகவத்கீதை** மாலை 6.30-சுவாமி கோலோகானந்தர் (ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம், 18, தெற்குமாட வீதி, திருவல்லிக்கேணி.) |
| **விசேஷ தினங்கள்:** | அந்தர் யோகம் (சாதனை தினம்)—ஞாயிறு (21—8—77)<br>ஓணம்—சனிக்கிழமை (27—8—77)<br>ஸ்ரீமத் சுவாமி நிரஞ்ஜனானந்த ஜயந்தி-ஞாயிறு (28-8-77)<br>ஸ்ரீமத் சுவாமி அத்வைதானந்த ஜயந்தி—திங்கள் (12—9—77)<br>ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்: **ஏகாதசி தினங்களில்** ஆரதிக்குப் பிறகு (25—8—77 & 9—9—77) |

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்,

தொலைபேசி: **71231**

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**

## ஒரு வேண்டுகோள்

★ அன்பர்கள் தங்களுடைய சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் சிலரை சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இதன் மூலம் நமக்கும் மற்றவர்களுக்கும் நாம் நன்மையைச் செய்து கொள்கிறோம்.

★ தனிப்பிரதி விற்பனையோ, சந்தா சேர்க்கும் ஏஜண்டுகளோ குறிப்பிடத்தக்க அளவுக்கு இல்லாததால், வாசக அன்பர்களே நண்பர்களைச் சந்தாதாரர்களாக்கி ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

★ ஒவ்வொரு ஆண்டும் சந்தாவைச் செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக, எப்போதும் பத்திரிகை வந்து கொண்டிருக்கும் வகையில் ஆயுள் சந்தாதாராகச் சேர்ந்து விடுவது நலம். ஆயுள் சந்தாதாரராக வசதி இல்லாத அன்பர்கள், சில ஆண்டுகளுக்குச் சேர்ந்தாற்போலவும் சந்தாவை முன்னதாகச் செலுத்தலாம்.

★ சந்தாதாரர்களை அதிகப்படுத்துவதில் தீவிர முயற்சி செய்து வருகிறோம். அன்பர்கள், தங்களின் பங்காக இந்தத் தெய்விகக் கைங்கரியத்தில் கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது மாதந்தோறும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகும்.

★ நண்பர்களுக்கும், அபிமானிகளுக்கும் பத்திரிகை போகும்படி செய்தால் ஒவ்வொரு மாதமும் அவர்களுக்கு நல்ல வெகுமதி அளித்ததாக அமையும்.

★ பந்துக்களுக்கும், குமாரத்திகளுக்கும் பத்திரிகை அனுப்பச் செய்தால் மாதந்தோறும் தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த சன்மானமாகும்.

★ பெரியோர்கள், இந்த வேண்டுகோளைத் தங்களுக்கு ஏதோ சம்பந்தமில்லாதது என்று புறக்கணித்துவிடாமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

### சந்தா விவரம்:

**வருட சந்தா (சிறப்பு மலர் உட்பட) ரூ. 7-00; தனிப்பிரதி 70 காசு; ஆயுள் சந்தா: ரூ. 100 (ஆயுள் சந்தாவைப் பகுதிப் பகுதியாகவோ, மாதம் ரூ. 10 ஆகவோ, மொத்தமாகவோ செலுத்தலாம்.)**

★ சந்தாதாரராக விரும்புபவர்களும் பத்திரிகை விற்பனையாளர்களும் பின்வரும் முகவரிக்குத் தொடர்பு கொள்ளலாம்.

புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது, புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள், தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.



ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

மயிலாப்பூர் : : சென்னை-600 004

ஆசிரியர்: சுவாமி சித்கனானந்தர்; துணை ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்
பதிப்பாளர்: சுவாமி சித்கனானந்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004
அச்சிடுபவர்: S. இராமசுவாமி, ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ், 97 லாய்ட்ஸ் ரோடு, சென்னை 600086